பற்களை சுத்தம் செய்வது *பாதி* வேலை தான் . . .

தினமும் ஈறுகளைப் பாதுகாப்பது அந்த வேலையை *பூர்த்திசெய்கிறது!*

உங்கள் பற்கள் எவ்வளவு ஒழுங்கானவையாக இருந்தாலும் அவைகளை வகிக்கும் ஈறுகள் பலமிழந்தோ அல்லது நோயுற்றோ போனால் அவை உபயோகமற்றதாகி விடுகின்றன. அதனால் இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல் வைத்தியர்கள் ஈறுகளை உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் வைத்திருக்க உபயோகிக்கும் சோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.

**கிப்ஸ்**

**எஸ்.ஆர். டூத்பேஸ்ட்**

S.R. TOOTHPASTE

பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது

CSR. 78-50-55 TY



# கல்கி பொருளடக்கம்

மலர் 11 இதழ் 30 | 1952 பிப்ரவரி 24 | கர மாசி 12



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 30

# மக்களின் வாக்கு: தெய்வத்தின் தீர்ப்பு

பாரத மக்கள் தீர்ப்புக் கூறி விட்டார்கள். ஐயந்திரிபுக்கு இடமின்றி முடிவு கூறி விட்டார்கள். "நேருஜிதான் எங்களுக்கு வேண்டும்" என்று சொல்லி விட்டார்கள். "அடுத்த ஐந்து வருஷங்களுக்குப் பாரத நாட்டில் நேரு சர்க்கார்தான் நடக்க வேண்டும்" என்று தங்கள் விருப்பத்தைத் தெரிவித்து விட்டார்கள்.

எழுதப் படிக்கத் தெரியாதவர்களே மிகுந்துள்ள இந்நாட்டில் சர்வஜன வாக்குரிமை அளிக்கப்படலாமா என்ற ஐயம் சிலருக்கு இருந்தது. அந்த ஐயம் இப்போது தீர்ந்து விட்டது. வோட்டுரிமை பெற்றவர்களில் மிகச் சிலர்தான் அந்த உரிமையைப் பயன் படுத்துவார்கள் என்று சிலர் ஐயப்பட்டதும் பொய்யாயிற்று. நூற்றுக்கு நூறு பேர் படிக்கத்தெரிந்தவர்களாயுள்ள இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும்போல இந்தியாவிலும் வோட்டுரிமை பெற்றவர்களில் மிகப் பெரும்பாலோர் தங்கள் உரிமையைப் பயன்படுத்தி வோட்டுக் கொடுத்தார்கள். வண்டி வாகனாதிகள் ஏற்படுத்தக் கூடாது என்ற சட்ட மிருந்தும், அதை யெல்லாம் பொருட்படுத்தாமல் மைல் கணக்காக நடந்து வந்து மகா ஜனங்கள் வோட்டு அளித்தார்கள். இவ்விதம் கோடிக்கணக்கான மக்கள் இரட்டை மாட்டுச் சித்திரம் உள்ள பெட்டியில் வோட்டுப் போட்டு "எங்களுக்கு நேருஜியின் தலைமைதான் வேண்டும்" "நாட்டுக்குக் காங்கிரஸின் ஆட்சிதான் வேண்டும்" என்று திட்டமாகச் சொல்லி விட்டார்கள்.

இத்தகைய பெருந் திரளான மக்களின் வாக்கு, தெய்வத்தின் வாக்கு என்றே கருதப்பட வேண்டும். அடுத்த ஐந்து வருஷங்களுக்குப் பாரத நாட்டில் நேருஜியின் தலைமையில் காங்கிரஸ் ஆட்சி நடைபெறுவது தெய்வத்தின் சித்தம் என்றே முடிவுகட்ட வேண்டும். தெய்வ சித்தத்தினால் ஏற்படுவது இந்தப் பழம் பெரும் பாரத நாட்டின் நன்மைக்காகவே இருக்கும் என்றும் நம்ப வேண்டும்.

* * * *

இந்தியப் பார்லிமெண்டில் மொத்தம் 496 ஸ்தானங்கள் உண்டு. இவற்றில் இன்றுவரை முடிவு தெரிந்துள்ள 455 ஸ்தானங்களில் 331 ஸ்தானங்கள் காங்கிரஸுக்குக் கிடைத்திருக்கின்றன. அதாவது 248 ஸ்தானங்கள் கிடைத்தால் காங்கிரஸுக்கு இறுதியான மெஜாரிட்டி கிடைத்ததாகும்; அதற்குமேலே 83 ஸ்தானங்கள் கிடைத்திருக்கின்றன. முடிவு தெரிய வேண்டிய ஸ்தானங்களிலும் பல காங்கிரஸுக்குக் கிடைக்கும். ஆகவே புதிய இந்தியப் பார்லிமெண்டில் நேருஜியைத் தலைவராகக் கொண்ட காங்கிரஸ் கட்சிக்கு மகத்தான பெரும்பான்மை பலம் இருக்கும்.

பாரத அரசாங்கத்தின் கீழ் மொத்தம் 22 மாகாணங்கள் தனித்தனி அரசாங்கங்களுடன்,—பல துறைகளில் சுயாட்சி உரிமைகளுடன்,—இருந்து வருகின்றன.

இவற்றில் அஜ்மீர், அஸ்ஸாம், போபால், பீஹார், பம்பாய், குடகு, டில்லி, ஹிமாசல் பிரதேஷ், ஹைதராபாத், மத்திய பாரத், மத்தியப் பிரதேஷ், மைசூர், பஞ்சாப், ராஜஸ்தான், ஸௌராஷ்டிரா, உத்திரப் பிரதேஷ், விந்தியப் பிரதேஷ், மேற்கு வங்காளம் ஆகிய பதினெட்டு மாகாணங்களின் சட்ட சபைகளில் காங்கிரஸ் கட்சி பெரும்பான்மை ஸ்தானங்களை அடைந்து விட்டது.

ஒரிஸ்ஸா மாகாணத்தில் தேர்தலுக்குப் பிறகு சுயேச்சையாளர் சிலர் காங்கிரஸில் சேர்ந்தபடியால் அங்கும் காங்கிரஸ் பெரும்பான்மையாகி விட்டது.

சென்னை, திருவாங்கூர்-கொச்சி, பெப்ஸு ஆகிய மூன்று மாகாணங்களில் மட்டுந்தான் காங்கிரஸுக்குப் பெரும்பான்மை கிடைக்கவில்லை.

எனவே மாகாண சட்டசபைத் தேர்தல்களிலும் மொத்தத்தில் காங்கிரஸ் மகத்தான பெரும்பான்மை அடைந்திருக்கிறது என்று திட்டமாய்ச் சொல்லலாம். முக்கியமாக பீஹார், பம்பாய், மத்தியப் பிரதேஷ், உத்தரப் பிரதேஷ் ஆகிய மாகாணங்களில் காங்கிரஸ் பிரமிக்கத் தக்க மெஜாரிட்டியை அடைந்திருக்கிறது. அதாவது நாட்டு

# அடை காக்கும் பருவம்!




ஐக்கிய ஜனநாயகக் கட்சியின் கூட்டம் அடுத்த மாதம் வரை தள்ளிப் போடப்பட்டிருக்கிறது

மக்களில் பெரும் பகுதியார் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகத் தங்களுக்கு நேருஜியின் தலைமையிலும் காங்கிரஸ் கட்சியின் ஆட்சியிலும் உள்ள நம்பிக்கையைத் தெரிவித்திருக்கிறார்கள். இந்தியப் பார்லிமெண்ட் வோட்டு மூலமாக ஒரு தடவையும், மாகாண சட்டசபை வோட்டு மூலமாக இன்னொரு தடவையும் ஐயந்திரிபுக் கிடமில்லாமல் தெரிவித்திருக்கிறார்கள்.

* * *

பாரத நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடு பட்டவர்களும் தேசபக்தி யுள்ளவர்களும் இந்தப் பொதுத் தேர்தலில் நேருஜியும், காங்கிரஸும் வெற்றி பெற வேண்டுமென்றுதான் விரும்பினார்கள். எனினும் ஜனநாயகம் நல்ல முறையில் நடைபெறுவதற்கு எதிர்ப்புக் கட்சி இருந்தால் நல்லது என்று எண்ணியவர்களும் உண்டு. அவர்களுடைய எண்ணமும் கைகூடியிருக்கிறது. மொத்தம் 496 ஸ்தானங்கள் உள்ள பார்லிமெண்டில் அமரர் 150 பேர் காங்கிரசுக்கு எதிர்ப்புக் கட்சியா யிருப்பார்கள். ஆனால் இந்த 150 ஸ்தானங்களைப் பல கட்சிக்காரர்களும் சுயேச்சையாளரும் பங்கு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். எதிர்ப்புக் கட்சி என்று சொல்லக்கூடிய கௌரவத்தை அடைவதற்குப் போதிய பலம் எந்தக் கட்சிக்கும் இல்லை. இது அவ்வளவு விரும்பத்தக்க நிலைமையன்று. எதிர்ப்பாளர்கள் எல்லாரும் இரண்டு அல்லது மூன்று கட்சியாக அமைந்து விட்டால் நன்றாயிருக்கும். ஜனநாயகத்தில் எதிர்ப்புக் கட்சிக்குத் தேவையும் அவசியமும் உண்டு என்பதில் ஐயமில்லை. சர்க்காரை நடத்தும் கட்சியார் கொண்டு வரும் மசோதாக்கள், திட்டங்கள் முதலியவற்றில் காணும் குறைகளை எடுத்துச் சொல்லவும் அபிவிருத்தி செய்யவும் எதிர்ப்புக் கட்சி வேண்டும். வாதப் பிரதிவாதங்கள் நல்ல முறையில் நடந்தால் பொது மக்களும் முக்கியமான அரசியல் பிரச்னைகளில் சிரத்தை கொள்ளுவார்கள். இனிமேல் வரும் பொதுத் தேர்தல்களில் கட்சி ரீதியாகப் போட்டியிடவும் வசதியாயிருக்கும். இந்தியப் பார்லிமெண்டிலும் மாகாண சட்டசபைகளிலும் அத்தகைய நேர்மையான எதிர்ப்புக் கட்சிகள் உருப்பெற்று ஜனநாயகத்துக்குத் துணை செய்யும் என்று எதிர்பார்க்கிறோம்.

* * *

கிழக்கு பஞ்சாப், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம் முதலிய மாகாணங்களில் காங்கிரஸ் பெரும்பான்மை பெற்றதை ஒரு மகத்தான அற்புதம் என்று சொல்வது மிகையாகாது. ஏனெனில் இம்மாகாண வாசிகள் பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட பயங்கர நிகழ்ச்சியினால் மிகவும் பாதிக்கப்பட்டவர்கள். லட்சக்கணக்கான அகதிகள் அம் மாகாணங்களில் இன்னமும் நிலை பெறாமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் காங்கிரஸ் அரசாங்கத்தின் மீது கோபங் கொள்வதற்கு அம்மாகாண வாசிகளுக்குக் காரணங்கள் ஏராளமாக உண்டு. இக் காரணங்களை உபயோகித்துக் கொள்ளலாம் என்று கருதித்தான் வடநாட்டில் ஜனசங்கம், ராம ராஜ்ய பரிஷத், ஹிந்து மகாசபை, கணதந்திர பரிஷத், அக்காலி சீக்கியர் முதலிய சமூக வாதக் கட்சியார் போட்டியிட முன்

வந்தனர். நேருஜியோ "சமூக வாதத்துக்குச் சிறிதும் இடங் கொடுக்க முடியாது" என்று ஒரே போடாகப் போட்டுக் கொண்டு வந்தார். தேர்தல் முடிவைப் பார்க்கும் போது சமூக வாதம் அம் மாகாணங்களில் அடியோடு தோற்றது என்று புலனாகிறது. மௌலானா ஆஸாத், ஜனப் கித்வாய் முதலிய முஸ்லிம்கள் உத்தரப் பிரதேசத்தில் ஹிந்து சமூக வாத அபேட்சகர்களுடன் போட்டியிட்டு, ஹிந்துக்களின் வோட்டைப் பெற்று, வெற்றி அடைந்திருக்கிறார்கள். பஞ்சாபில் அகாலியர் கட்சியும் தோல்வியடைந்து விட்டது. இவை யெல்லாம் நேருஜிக்கு மகத்தான வெற்றி என்பதில் ஐயமில்லை. வட நாட்டு மக்கள் நேருஜியிடமும் காங்கிரஸினிடமும் வைத்துள்ள அபார நம்பிக்கைக்கு இணையற்ற அத்தாட்சியாகும்.

இத்தகைய மகத்தான பொதுஜன நம்பிக்கை ஒரு நாளும் வீண் போகாது என்று உறுதியாக நம்புகிறோம். அந்த நம்பிக்கையை நேருஜி பரிபூரணமாக நிறைவேற்றி வைப்பார் என்று நிச்சயங் கொண்டிருக்கிறோம். காங்கிரஸ் பெயரால் தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்றவர்கள் அனைவரும் நேருஜிக்குப் பக்கபலமாக நின்று பாரத நாட்டில் அமைதி நிலவிச் சுபிட்சம் பெருகுவதற்குரிய பிரயத்தனங்களை இடைவிடாமல் செய்து வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

அப்படிச் செய்யப்படும் பிரயத்தனங்களுக்குத் தெய்வத் திருவருள் பரிபூரண வெற்றியை அளிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

வாழிய பாரத மணித் திருநாடு!

# மனிதன் எப்படி உயர்கிறான்?

மனிதன் உழைப்பினால் உயர்கிறான்; மனிதன் வீர தீரங்களினால் உயர்கிறான்; தன்னடக்கத்தினால் உயர்கிறான்; தன்னலமற்றுச் சமூகத்துக்கும் தேசத்துக்கும் தொண்டு செய்வதினால் உயர்கிறான்; இடைவிடாத முயற்சியினால் உயர்கிறான்; தளராத ஊக்கத்தினால் உயர்கிறான்; தலைவர்களிடம் அசைக்க முடியாத நம்பிக்கை வைப்பதினால் உயர்கிறான்; அன்பினால் உயர்கிறான்; ஆண்மையினால் உயர்கிறான்; பலர் சேர்ந்து செய்யும் கூட்டுறவு முயற்சியினால் உயர்கிறான்; மலை போன்ற கஷ்டங்கள் வந்த போதிலும் மனந் தளராமல் மலையினும் பெரிய பிரயத்தனங்களைச் செய்து அந்தக் கஷ்டங்களை வெற்றி கொள்வதினால் உயர்கிறான்; சமூகத்துக்காகவும் நாட்டுக்காகவும் உயிரையும் கொடுக்க முன் வரும் தியாக புத்தியினால் மனிதன் உயர்கிறான்.

இப்படி யெல்லாம் மனிதன் உயரும்போது அவனைப் பெற்ற தேசமும் உயர்கிறது; தேசத்தின் எதிரிகளை முறியடித்து வெற்றி காண்கிறது; உலகம் வியக்கும்படி மகோன்னதம் அடைகிறது.

இம்மாதிரி, மனிதன் என்னென்ன வழிகளில் உயர்கிறான் என்பதை "பெர்லின் வீழ்ச்சி" (The Fall of Berlin) என்னும் மகத்தான ருஷ்ய ஸினிமாப் படம் உணர்த்துகிறது; ஒவ்வொரு காட்சியும் அதை உணர்த்துகிறது; ஒவ்வொரு நிகழ்ச்சியும் உணர்த்துகிறது; ஒவ்வொரு பாத்திரத்தின் மூலமாகவும் உணர்த்துகிறது; பாத்திரங்கள் பேசும் ஒவ்வொரு வார்த்தையின் மூலமாகவும் உணர்த்துகிறது.

"பெர்லின் வீழ்ச்சி" என்னும் படமானது மனிதனுடைய உடலுழைப்பை உயர்த்துகிறது; அறிவுத் திறனை உயர்த்துகிறது; வீரத்தை உயர்த்துகிறது; தேச பக்தியை உயர்த்துகிறது; தியாகத்தை உயர்த்துகிறது; தன்னல மறுப்பை உயர்த்துகிறது; பலர் சேர்ந்து ஒத்துழைக்கும் கூட்டுறவு முயற்சியை உயர்த்துகிறது; சளிப்பில்லா முயற்சியை உயர்த்துகிறது.

தனி மனிதன் மூலமாக அப் படம் அவன் பிறந்த நாட்டையே உயர்த்துகிறது; அந்த நாட்டுத் தலைவர்களை உயர்த்துகிறது; அந்த நாட்டுத் தனித் தலைவனை உலகிலேயே ஒப்பில்லாதவன் என்ற முறையில் தூக்கி வைக்கிறது.

(இன்னும் சொல்லப் போனால் மேற்படி ருஷ்யப் படம் பிற நாட்டினரை அநாவசியமான அளவுக்குத் தாழ்த்துகிறது; எந்த இங்கிலாந்தின் உதவியினாலும் அமெரிக்காவின் உதவியினாலும் ருஷ்யா சென்ற மகா பயங்கர யுத்தத்தில் வெற்றி கண்டதோ அந்த இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் அவசியமின்றித் தாழ்த்துகிறது.)

"முஸ்ஸார்ஸ்கி" என்னும் மற்றொரு ருஷ்யப் படம் சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு ருஷ்யாவில் வாழ்ந்த ஒரு இசை நாடகக் கலைஞனின் வாழ்க்கையைச் சித்திரிக்கிறது. அந்த நாளில் ருஷ்யப் பிரபுக்கள் கோஷ்டியினர் அயல் நாட்டுச் சங்கீத பாணிகளையே விரும்பி அநுபவித்துப் பாராட்டி வந்தார்கள்; அதுவே நாகரிகமென்று கருதி வந்தார்கள்.

"முஸ்ஸார்ஸ்கி" புதிய ருஷ்ய தேசிய இசை இயக்கத்தைத் தொடங்கியவர்களில் ஒருவர். அவர் ருஷ்யப் பாமர மக்களின் சுக துக்கங்களை விஷயமாகக் கொண்டு பாடல்களும் இசை நாடகங்களும் இயற்றினார். ருஷ்ய நாட்டுக்கே உரிய பழைமையான சங்கீத பாணியைக் கையாண்டார். அவருடைய முயற்சிக்கு எத்தனையோ இடையூறுகள் ஏற்பட்டன. இடைவிடா முயற்சியினால் எல்லா இடையூறுகளையும் விலக்கி வெற்றி கண்டார். அவருடைய நண்பர்களும் அவருக்கு உதவினார்கள். இறுதியில் அவர் ருஷ்யாவுக்குப் புத்துயிர் அளித்த அமர கலைஞர்களில் ஒருவர் ஆனார்.

சர்வ தேசிய பிலிம் திருவிழாவுக்காகச் சென்னைக்கு வந்திருந்த மற்றும் பல அயல் நாட்டுப் படங்கள் மேற்கண்டவாறே ஒவ்வொரு துறையில், ஒவ்வொரு முறையில், மனிதனை உயர்த்துவதையே இலட்சியமாகக் கொண்டிருக்கின்றன. மனிதனை உயர்த்துவதின் மூலம் அந்தந்த நாட்டையும் அப்படங்கள் உயர்த்துகின்றன.

அமெரிக்காவிலிருந்து மேற்படி விழாவுக்காக வந்திருந்த படங்களில் ஒன்றை உதாரணத்துக்காகப் பார்க்கலாம். "யாங்கி மகனீயன்" (The Magnificent Yankee) என்பது ஒரு படம். அமெரிக்காவின் புகழ்பெற்ற நீதிபதியும் தத்துவ ஞானியுமான ஆலிவர் வெண்டல் ஹோம்ஸ் என்பவரின் வாழ்க்கைச் சித்திரம். இவர் சமீப காலத்தில் வாழ்ந்தவர்தான். இவருடைய வாழ்க்கையில் பிரமிக்கத் தக்க சம்பவம் ஒன்றுமில்லை.

படத்திலும் கற்பனை செய்தும் காட்ட வில்லை. அமெரிக்க உயர்தர நீதி மன்றத்தில் உதவி நீதிபதியாக நியமிக்கப்பட்டு அவர் மனைவியுடன் புதிய ஜாகைக்கு வந்ததிலிருந்து படம் ஆரம்பமாகிறது. அவருடைய வீட்டு வாழ்க்கையையும் கோர்ட்டு வாழ்க்கையையும் சித்திரிக்கிறது. வாழ்க்கைத் துணைவியிடம் அவர் வைத்திருந்த ஒப்பற்ற அன்பைச் சித்திரிக்கிறது. வருஷா வருஷம் மனைவியின் பிறந்த தினத்தன்று அவர் அமெரிக்க மண்ணில் விளைந்து பூத்த ஒரு சின்னஞ் சிறு மலரைப் பறித்து வந்து கொடுத்து வந்தார். மனைவி இறந்த பிறகும் அவருடைய சமாதிக்குப் பக்தியுடன் சென்று அதே மலர்ப் பரிசை அளித்து வந்தார். தொண்ணூற்று நாலு வயதில் இறக்கும் வரையில் அந்தக் கடமையை அவர் மறக்கவில்லை.

அவருடைய மனைவி ஒரு நாள் "நான் தங்களுக்குக் குழந்தைகள் பெற்றுத் தரவில்லையே!" என்று வருந்தினாள். "குழந்தை வளர்க்கும் பொறுப்பு இன்றிப் பல குமாரர்களை நாம் அடைவோம்" என்றார் ஹோம்ஸ். அவரிடம் காரியதரிசி வேலை பார்க்க வந்த ஒவ்வொரு இளைஞனையும் தன் சொந்தக் குமாரனாக்கிக் கொண்டார். முதிர்ந்த பிராயத்தில் அவருடைய பிறந்த நாளன்று அவரால் முன்னுக்கு வந்தவர்கள் பலர், வரிசையாக மலர்ச் செண்டுகளுடன் அவரைத் தரிசித்து வாழ்த்த வருகிறார்கள். ஒவ்வொருவரையும் அவர் "குமாரா!" "குமாரா!" என்று வரவேற்கிறார். அவர் கண்களில் நீர் ததும்புகிறது; அவருடைய நாத் தழுதழுக்கிறது.

நீதிமன்றத்தில் ஜட்ஜ் ஹோம்ஸ் யாருக்கும் அஞ்சாமல் நீதி நெறியினின்றும் அணுவளவும் பிறழாமல் கடுக்கண்ட நியாயம் வழங்கி வருகிறார். அமெரிக்காவின் ஜனாதிபதியையும் எதிர்த்து நிற்கத் துணிகிறார். இதனால் அவருடைய மதிப்பு மேலும் உயர்கிறது. உதவி நீதிபதியாக வந்தவர் பிரதம நீதிபதி யாகிறார். நெடுங் காலம் அந்தப் பதவியை அவர் வகிக்கிறார். அவருடைய தீர்ப்புக்கள் பிரசித்த நீதி இலக்கியங்களாகின்றன.

நீதிபதி ஹோம்ஸின் இந்த வாழ்க்கைச் சித்திரப் படம் அமெரிக்கர்களின் ஒழுக்கத்தை உயர்த்துகிறது; அவர்களுடைய தார்மிக பலத்தை உயர்த்துகிறது; அவர்களுடைய குடும்ப வாழ்க்கையை உயர்த்துகிறது; அவர்களுடைய நீதி தவறாத நேர்மையை உணர்த்துகிறது. இவற்றின் மூலம் அமெரிக்கா தேசத்தையே உயர்த்துகிறது. மனிதனையும் மனித வர்க்கத்தையுமே உயர்த்துகிறது என்று சொல்வதும் மிகையாகாது.

இம்மாதிரி அந்தந்த நாட்டுக்கு உயர்வு அளிக்கக்கூடிய படங்கள் பல அயல் நாடுகளிலிருந்து சர்வ தேசிய பிலிம் திருவிழாவுக்கு வந்திருந்தன. இத்தாலிப் படம் ஒன்று வந்திருந்தது. இரண்டாவது உலக மகா யுத்தத்தில் இத்தாலி படுதோல்வி யடைந்த பிறகு அந்த நாட்டில் ஏற்பட்டிருந்த பயங்கரமான வறுமைக் கொடுமையைச் சித்திரிக்கும் படம் அது. "பைசிக்கிள் திருடன்" என்று பெயர். அந் நாட்டில் பலரையும் போல் ஒரு குடும்பஸ்தன் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு ஆளாகிறான். வீட்டில் வறுமை தாண்டவமாடுகிறது. அதற்காக வீட்டைத் துறந்து ஓடுகிறானா! பிச்சை வாங்கப் போகிறானா! அல்லது அவனுடைய மனைவியும் குழந்தைகளும் பிச்சை எடுக்கப் போகிறார்களா! இல்லை. குடும்பத் தலைவன் வேலை தேடித்தான் போகிறான். அவனுக்கு ஒரு வேலை கிடைக்கிறது. சுவர்களில் சினிமா விளம்பரங்களை ஒட்டும் வேலை. வேலைக்கு நிபந்தனை அவனிடம் சைக்கிள் இருக்க வேண்டும் என்பது. ஒப்புக்கொண்டு வந்து விடுகிறான். அவனுடைய சைக்கிள் அடகு வைக்கப்பட்டிருக்கிறது. மனைவி வீட்டிலிருந்த படுக்கை விரிப்புகளை விற்றுச் சைக்கிளை மீட்பதற்குப் பணம் தருகிறாள். சைக்கிளை மீட்டு வந்து வேலைக்குப் போகிறான். அதைச் சுவரில் சாத்திவிட்டு விளம்பரம் ஒட்டும் போது சைக்கிள் திருட்டுப் போய் விடுகிறது!

இந்த இடம் வருவதற்குள்ளேயே படம் பார்ப்பவர்களின் நெஞ்சு நெகிழ்ந்து போய்விடும். பிறகு வரும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அளவிலாத பரபரப்பை உண்டு பண்ணித் துயர சாகரத்தில் மேலும் மேலும் ஆழ்த்தும். அந்த மனிதனும் அவனுடைய பத்து வயதான குமாரனும் திருட்டுப் போன சைக்கிளைக் கண்டு பிடிக்கப் போகிறார்கள். சில சிநேகிதர்களும் உதவி செய்கிறார்கள். "இதோ திருடன் அகப்பட்டு விட்டான்" "சைக்கிள் அகப்பட்டு விட்டது" என்று தோன்றும். ஆனால் கை நழுவிப் போய்விடும். நடுவில் தகப்பனுக்கும் மகனுக்கும் சிறிய சண்டை; பிறகு சமாதானம். கடைசியாக, தகப்பன் மகனைத் தன்னை விட்டுப் போகச் சொல்லிவிட்டுத் தானே ஒரு சைக்கிளைத் திருடி விடுகிறான்! உடனே அகப்பட்டுக் கொள்கிறான். மகனும் இந்த நிகழ்ச்சியைப் பார்த்து விடுகிறான். இங்கே படம் பார்ப்பவர்களின் நெஞ்சு வெடித்தே போய் விடும். சைக்கிளுக்கு உடையவன் நம் கதாநாயகனைப் 'போனால் போகட்டும்' என்று விட்டு விடுகிறான். தகப்பனும் மகனும் வீதியில் நடந்து போகிறார்கள். மகனைப் பார்க்கவே தகப்பனுக்கு வெட்கமாயிருக்கிறது. ஆனால் மகன் அவனைக் கை விடவில்லை. அந்தச் சின்னஞ் சிறு குழந்தை கடைசியில் தன் குஞ்சுக் கையினால் தந்தையின் கரத்தைப் பற்றுகிறான். தந்தை அந்தக் குஞ்சுக் கரத்தை அழுத்திப் பிடித்துக் கொள்கிறான். "நீ இருக்கும்போது எனக்கு என்ன குறை! வாழ்க்கைப் போராட்டத்தில் இன்னும் ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று குழந்தையின் கரத்தை அழுத்திப் பிடிக்கும் தகப்பனுடைய கை சொல்கிறது. படம் முடிந்து விடுகிறது.

இப்படிப்பட்ட பயங்கர சமூக நிலையைச் சித்திரிக்கும் சோகப் படமும் மனிதனை உயர்த்தத்தான் செய்கிறது. வாழ்க்கைப் போரில் ஈடுபடுவதற்கு வேண்டிய மனோ தைரியத்தை அது அளிக்கிறது. உழைப்பின் பெருமையை உணர்த்துகிறது. குடும்ப வாழ்க்கையின் ஒப்பில்லா உயர்வை உணர்த்துகிறது. அன்பை உயர்த்துகிறது; ஆண்மையை உயர்த்துகிறது; படுதோல்வியுற்று அதல பாதாளத்தில் வீழ்ந்திருந்த இத்தாலி மக்களையும் உயர்த்துகிறது. இம் மக்கள் இன்று வீழ்ச்சியுற்றிருந்தாலும் விரைவில் உன்னதத்தை அடைவார்கள் என்ற நம்பிக்கையை ஊட்டுகிறது.

இம்மாதிரி மனிதனை உயர்த்தும் அயல் நாட்டுப் படங்களைப் பார்த்துவிட்டு நம் நாட்டில் சமீப காலத்தில் வெளியாகி யிருக்கும் பிரசித்தமான படங்களை எண்ணிப் பார்த்தோமானால், அடாடா! என்னவென்று சொல்வது!

நம்முடைய படங்கள் மனிதனை எந்தெந்த விதத்தில் தாழ்த்தலாமோ, அப்படி யெல்லாம் தாழ்த்துகின்றன! மனிதனைத் தாழ்த்தும்போது நம் நாட்டையுந்தான் தாழ்த்துகின்றன!

சமீப காலத்தில் இந்தியா தேசத்தையே ஒரு கலக்குக் கலக்கிவிட்ட படங்களில் ஒன்று "சம்சாரம்." மகத்தான வெற்றி; பிரம்மாண்டமான

வருவல்; படத்தில் வெளியாகியிருக்கும் நடிப்புத் திறமையும் அபாரம். கதாநாயகி அற்புத உணர்ச்சியுடன் சில இடங்களில் நடித்திருக்கிறாள்.

ஆனால் விஷயம் என்ன! ஒரு குடும்பஸ்தன் குடும்பக் கஷ்டங்களையும் குடும்பச் சச்சரவுகளையும் தாங்க முடியாமல் வீட்டை விட்டு ஓடிப் போகிறான். தாலி கட்டிய பெண்டாட்டியைப் பிரசவ ஆஸ்பத்திரியில் விட்டுவிட்டு ஓடிப்போகிறான்! அதைவிடத் தற்கொலை செய்து கொண்டு அவன் செத்திருக்கலாம். அதற்கும் தைரியமில்லை. வீட்டையும் ஊரையும் விட்டு ஓடிப்போய்ப் பிச்சை எடுத்துப் பிழைக்கிறான். இந்திய ஆண் குலத்துக்கு எத்தனை பெருமை!

அவன் பெண்டாட்டி பிள்ளைகள் இடம் பெயர்ந்து அலைகிறார்கள். ஒரு மோட்டார் ஷெட்டில் மழைக்கு ஒதுங்குகிறார்கள். மோட்டார் சொந்தக்காரன் மோட்டாருடன் வருகிறான். "நீங்கள் நனைந்து நாசமானால் எனக்கு என்ன! என் மோட்டார் நனையக் கூடாது!" என்று அவர்களை விரட்டியடிக்கிறான். இந்திய மக்களின் தயாள குணம் — மனிதத் தன்மை — எப்படி உயர்த்தப்படுகிறது!

குழந்தைகளுக்குப் பிச்சை எடுக்கத் தாயார் கற்றுக் கொடுக்கிறாள். பாட்டுப் பாடிப் பிச்சை எடுக்கக் கற்றுக் கொடுக்கிறாள்! குழந்தைகள் "அம்மா! பிச்சை போடுங்கள்!" என்று பாடிக் கொண்டு பிச்சை எடுக்கின்றன. ("இந்தப் பாட்டு மிக இனிமையாயிருக்கிறது!" என்று ஒரு பிரசித்தமான பத்திரிகை விமரிசனமும் எழுதியிருக்கிறது. அந்த இனிமையில் இடிவிழ!)*

கடைசியில் எல்லாம் சுபமாக முடிகிறது. எப்படி! உழைப்பினாலா! விடா முயற்சியினாலா! அறிவுத் திறமையினாலா! தயாள குணத்தினாலா! இல்லை! குருட்டு அதிர்ஷ்டத்தினால்!

கதாநாயகனுடைய தம்பி—கட்டை வண்டி ஓட்டிய பட்டிக்காட்டு இளைஞன்—ஒரு மில் மானேஜரின் புதல்வியைத் திடீர்க் காதலினால் மணந்து கொள்கிறான். அதே ஆலையில், கதாநாயகன் வேலை செய்ய வருகிறான். அங்கேயே அவன் மகனும் வேலை பார்க்கிறான். அந்த மில் முதலாளியிடமே திருட வருகிறாள் கதாநாயகி. அங்கேயே வந்து சேருகிறான் கதாநாயகனின் பித்துக்கொளி மைத்துனன். திடீரென்று எல்லாரும் ஒன்றுபட்டுத் திடீர்ப் பணக்காரர்களாகிச் சுக வாழ்க்கை தொடங்குகிறார்கள். படத்தைப் பார்ப்பவர்கள் "இப்படி ஒரு அதிர்ஷ்டம் நமக்கும் அடிக்கக் கூடாதா!" என்று ஆகாசக் கோட்டை கட்டிக் கொண்டு வீடு திரும்புகிறார்கள்.

ஆகா! சமீபத்தில் சுதந்திரம் அடைந்த ஒரு மாபெரும் தேசத்தின் மக்களுக்கு எவ்வளவு அருமையான வாழ்க்கை இலட்சியம்! மக்களை எப்படி உயர்த்தக் கூடிய படம்!

சர்வ தேசிய பிலிம் திருவிழாவுக்கு என்று பொறுக்கி எடுக்கப்பட்ட "பாதாள பைரவி" என்னும் தெலுங்குப் படத்தைப் பார்க்கும் துரதிர்ஷ்டமும் நமக்குக் கிடைத்தது.

இதில் ஒரு தோட்டக்காரியின் மகன் ஒரு ராஜகுமாரியைக் காதலிக்கிறான். காதலிக்கட்டும்; திவ்யமாய்க் காதலிக்கட்டும். அந்தக் காதலின் பூர்த்திக்கு அவன் என்ன வழிகளைக் கையாளுகிறான் தெரியுமா!

கள்ளத்தனமாக அரண்மனை அந்தப்புரத்துக்குள் போகிறான். அங்கே செம்மையாக அடியும் உதையும் வாங்கிக் கொண்டு திரும்பி வருகிறான்!

இந்தத் தீர வீர புருஷனைப் பாதாள பைரவிக்குப் பலி கொடுப்பதற்காக ஒரு மந்திரவாதி தேர்ந்தெடுக்கிறான். அவனைப் பாதாளக் குகைக்கு அழைத்துப் போகிறான். கதாநாயகன் தன்னுடைய அபார சாமர்த்தியத்தினால் மந்திரவாதியைப் பலி கொடுத்து விட்டுப் பாதாள பைரவியின் அருளைப் பெறுகிறான். அதன் மூலம் அரண்மனை வாழ்வும் போக போக்கியங்களும் அடைகிறான்!

பின்னர், இன்னும் சில சிக்கல்கள் ஏற்படுகின்றன. சிக்கல்கள் அதே வித அபூர்வ முறைகளினால் விடுபடுகின்றன.

கதாநாயகனுக்கு ஒரு அசட்டு சிநேகிதன்; கோமாளிக் கூத்தன். கதாநாயகியின் மாமன் ஒரு பேடி; கதாநாயகியின் தாயார் ஒரு சுயநலப் பேய். கதாநாயகியின் தகப்பன் ஒரு 'இஸ்பேட்' ராஜா.

இந்தப் படத்தைப் பார்ப்பதற்கு டிக்கட் வாங்குவதற்காக ஜனங்கள் வரிசை வரிசையாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!

படம் பார்ப்பவர்களில் பலருக்கு மனதில் ஒரு சபலம் ஏற்படலாம். இம்மாதிரி நாமும் ஒரு மந்திர வாதியைப் பாதாள பைரவிக்குப் பலி கொடுத்து அரசகுமாரியையும் இராஜபோகங்களையும் அடையக் கூடாதா என்ற சபலந்தான்.

இந்தப் படத்தைப் பார்ப்பதற்காக வெள்ளைக்காரர் ஒருவர் வந்திருந்தார். பின்னோடு மொழி பெயர்ப்பாளர் ஒருவரையும் அழைத்து வந்திருந்தார். முக்கால் மணி நேரம் ஆன பிறகு கேலிச் சிரிப்புச் சிரித்து விட்டு எழுந்து போனார். தலையில் அடித்துக் கொள்ளாத தோஷந்தான்!

இவ்வளவு மேலான இலட்சியம் வாய்ந்த படத்தை எடுத்தவர்கள் 'பாதாள பைரவி'யின் அருளால் சகல சுக போகங்களையும் அடையட்டும்!

இந்தப் படத்தைச் சர்வதேச பிலிம் விழாவுக்குத் தேர்ந்தெடுத்த புண்ணியவான்கள் தலைக்கு ஒரு ராஜகுமாரியைக் கலியாணம் செய்து கொண்டு மகாராஜாக்களாயிருக்கட்டும்!

சர்தார் படேல் கூடத்தான் காலமாகிவிட்டார்! இந்தப் பிலிம் மகாராஜாக்கள் தேர்தலுக்குக் கூட நின்று ஒரு கை பார்க்கலாமல்லவா!

*　　*　　*

**ப**ணம் சம்பாதிப்பதற்காகப் படங்கள் எடுக்கட்டும். 'பாமர' மக்களுக்குக் களிப்பூட்டுவதற்காக ஆடல் பாடல்கள் நிறைந்த படங்களையும் எடுக்கட்டும். பத்துப் படங்களுக்கு ஒரு படம் வீதமாவது நம் நாட்டையும் நாட்டு மக்களையும் உயர்த்தக்கூடிய முறையில் நம் ஸினிமா முதலாளிகள் உயர்தரப் படமாக எடுக்கக் கூடாதா! வெளி நாடுகளில் காட்டிப் புகழ் பெறக் கூடிய படமாக எடுக்கக் கூடாதா! ஸினிமா முதலாளிகள் நாலு பேர்கள் சேர்ந்தாவது இந்த மாதிரி நல்ல படம் எடுக்கக் கூடாதா!

சில வருஷங்களுக்கு முன்னால்கூட ஹிந்தியிலும் தெலுங்கிலும் இத்தகைய உயர் இலட்சியமுள்ள படங்கள் ஒரு சில வெளிவந்து கொண்டிருந்தன. இப்போது அதற்கும் கேடு வந்து விட்டதாக அல்லவா தோன்றுகிறது!

---

* பிச்சை எடுப்பதைத் தடுக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள். அதற்கு முன்னால், ஸினிமாப் படங்களில் பிச்சை எடுக்கும் காட்சியைக் காட்டுவோருக்கு ஆயுள் தண்டனை விதிக்க வேண்டும் என்று ஏன் சட்டம் இயற்றக் கூடாது?

# பொன்னியின் செல்வன்

கல்கி

மணியம்.

## அத்தியாயம் 8

## "ஐயோ! பிசாசு!"

கற்பக விருட்சம் பூங்குழலியின் மீது வர்ண மலர்களைச் சொரிந்தது. தேவலோகத்துக் கின்னரி வாத்தியங்கள் இன்ப கீதங்களைப் பொழிந்தன. ஏன்? பூங்குழலியின் மேனி நரம்புகளே யாழின் நரம்புகளாகித் தெய்வ கானம் இசைத்தன. இளவரசரின் கனிவு செறிந்த மொழிகள் அவளுக்கு அத்தகைய போதையை அளித்தன.

"இளவரசே! நான் தேவலோக கன்னிகை அல்ல; ஏழை ஓடக்காரப் பெண். தாங்கள் அருந்தியதும் தேவலோகத்து அமுதம் அல்ல; குழகர் கோயிலில் கிடைத்த பாலமுதம்!" என்றாள்.

"நீ தேவலோக கன்னிகை யில்லை யென்றால், நான் நம்பி விடுவேனா? வருணனின் திருப் புதல்வி அல்லவா நீ? சமுத்திர குமாரி! எத்தனை தடவை எனக்கு நீ உயிர் அளித்திருக்கிறாய்? உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றார் இளவரசர்.

"ஐயா! இன்னும் ஒரு பகலும் ஒரு இரவும் தங்களுடன் இருக்க இந்த ஏழையை அனுமதிக்க வேண்டும்" என்றாள் பூங்குழலி.

"அது எப்படி முடியும்? உடனே நான் பழையாறைக்குப் புறப்பட வேண்டுமே?" என்றார் இளவரசர்.

"இல்லை; தங்களை நாகைப்பட்டினத்துக்கு அழைத்துச் செல்லும்படி செய்தி வந்திருக்கிறது."

"யாரிடமிருந்து?"

"இளைய பிராட்டியிடமிருந்துதான்!"

"அது யார் அங்கே, இன்னொருவன்? வந்தியத்தேவனுடன் படகை இழுத்து வருகிறவன்?"

"என் அத்தான் சேந்தன் அமுதன். இளையபிராட்டி அவனிடந்தான் செய்தி அனுப்பியிருக்கிறார், தங்களை நாகைப்பட்டினத்தில் உள்ள சூடாமணி விஹாரத்திற்கு அழைத்துச் செல்லும்படி."

"ஆஹா! என் தமக்கையின் மனம் மாறி விட்டதா? எனக்கு முடிசூட்டும் ஆசை அகன்று விட்டதா? வெகு காலமாக எனக்குப் புத்த சங்கத்தில் சேர வேண்டும் என்ற ஆசை உண்டு. புத்த சங்கத்தில் சேர்ந்து பிக்ஷு ஆவேன். தூர தூர தேசங்களுக்கு யாத்திரை செய்வேன்! சாவகம் — கடாரம் — மாயிருடிங்கம்—மாபப்பாளம்—சீனம்! ஆஹா! என்னுடைய பாக்கியமே பாக்கியம்! பூங்குழலி! வா, போகலாம்!" என்று கூறி இளவரசர் எழுந்து நின்றார்.

அவருக்கு இன்னும் முழு நினைவு வரவில்லை, சுர வேகத்திலேயே பேசுகிறார் என்று பூங்குழலி சந்தேகித்தாள்.

அதேசமயத்தில் தூரத்தில் ஓலமிடும் குரல் ஒன்று கேட்டது.

இளவரசர் திடுக்கிட்டு நின்று, "பூங்குழலி! அது என்ன?" என்றார்.

"ஆந்தை கத்துகிறது, ஐயா!" என்றாள்.

"இல்லை! அது மனிதக் குரல்! ஏதோ பெரும் அபாயத்தில் சிக்கியவனின் அபயக் குரல்! அவனைக் காப்பாற்றிவிட்டுப் போகலாம். புத்த சங்கத்தில் சேருவதற்கு முன்னால் ஒரு புண்ணிய காரியம் செய்யலாம்!" என்று இவ்விதம் கூறிவிட்டு இளவரசர் பாய்ந்து ஓட முயன்றார். அந்த முயற்சியில் திடீரென்று கீழே விழுந்தார். பூங்குழலி அவரைத் தாங்கிக் கொண்டாள்.

படகைக் கரை சேர்த்தவர்கள் இருவரும் ஓடி வந்தார்கள். மீண்டும் உணர்ச்சியை இழந்துவிட்ட இளவரசரை அவர்கள் மெதுவாகத் தூக்கிக் கொண்டு போய்ப் படகில் பத்திரமாய்ச் சேர்த்துப் படுக்க வைத்தார்கள்.

* * *

**கா**ல்வாயில் படகு போக ஆரம்பித்தது. இளவரசரைத் தவிர்த்த மற்ற மூவரும் இட நெருக்கடியுடன் அதில் உட்கார்ந்திருந்தார்கள்.

வந்தியத்தேவன், "பூங்குழலி! நாலு பேரை இந்தப் படகு தாங்குவது கடினம். எப்படியும் நான் உங்களிடம் விடை பெற்றுக்கொள்ள வேண்டியவன். இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். இளவரசரைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பது உங்கள் பொறுப்பு. உங்களுக்கு



அதிகம் நான் சொல்ல வேண்டியதில்லை!" என்று சொன்னான்.

அவனுடைய குரல் தழதழத்தது. நிலாக் கிரணம் அவன் முகத்தில் விழுந்த போது கண்களில் முத்துத் துளிகள் ஒளி வீசித் திகழ்ந்தன.

"கோடிக்கரைக் காடு தாண்டிய பிறகு இறங்கிச் செல்லலாமே? என் குதிரையையும் அங்கேதான் நிறுத்தி வைத்திருக்கிறேன். அடையாளம் நினைவிருக்கிறதல்லவா?" என்றான் சேந்தன் அமுதன்.

"வேண்டாம்; நான் இங்கேயே இறங்கிக்கொள்கிறேன். குழகர் கோயில் பிராகாரத்தில் சற்று நேரம் படுத்துத் தூங்கிவிட்டுப் பொழுது விடிவதற்குள் எழுந்து புறப்படுகிறேன். இல்லாவிட்டால், நாளைக்குப் பிரயாணம் செய்யமுடியாது! வழியில் எவ்வளவு தடங்கல்களோ!" என்றான் வந்தியத் தேவன்.

பூங்குழலி அத்தனை நேரமும் தன் மடியில் பத்திரப் படுத்தி வைத்திருந்த பொட்டணத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். "இந்தா! குழகர் கோயில் பிரஸாதம். இதைச் சாப்பிட்டு விட்டுத் தூங்கு!" என்றாள்.

"நீங்களும் ஒன்றும் சாப்பிடவில்லையே, உங்களுக்கு வேண்டாமா?"

"கோடிக்கரையிலிருந்து காத தூரம் கால்வாயில் போய் விட்டால் எத்தனையோ கிராமங்கள். நானாவது சேந்தனாவது போய் உணவு சம்பாதித்துக் கொண்டு வருவோம். உன் விஷயம் அப்படி யல்ல. நீ ஒருவர் கண்ணிலும் படாமல் பழையாறை போய்ச் சேர வேண்டும் அல்லவா?"

"படகில் இளவரசர் இருக்கிறார் என்பதை நீங்களும் மறந்துவிடக் கூடாது."

"இந்தப் படகில் இருப்பவர் இளவரசர் என்று யார் நம்புவார்கள்? அதைப் பற்றிக் கவலைப்படாதே! எங்கள் பொறுப்பு. இந்த ஓட்டைப் படகை யாரும் கவனிக்க மாட்டார்கள்."

"சரி; அப்படியானால் இங்கேயே நான் இறங்கிக் கொள்கிறேன்."

அச்சமயம் மறுபடியும் அந்த ஓலக் குரல் கேட்டது. "ஆ! அது என்ன?" என்று இளவரசர் கேட்டுவிட்டு மறுபடியும் உணர்வை இழந்தார்.

பூங்குழலி எழுந்து நின்றாள்.

"முடியாது; என்னால் முடியாது. இளவரசருக்குத் தெரிந்தால் என்னை மன்னிக்கமாட்டார். இன்னும் கொஞ்ச நேரம் படகில் இரு. அந்த மந்திரவாதியைச் சேற்றிலிருந்து எடுத்து விட்டு விட்டு வருகிறேன். இங்கிருந்து அந்த இடம் கிட்டத்தான் இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே படகிலிருந்து கால்வாயின் கரையில் குதித்தாள்.

"அப்படியானால் நானும் உன்னோடு வருகிறேன். அந்தப் பாதகனிடம் உன்னைத் தனியாக விட மாட்டேன்" என்றான் சேந்தன் அமுதன்.

"இல்லை; அமுதா! நீ படகில் இரு! இளவரசரை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் பூங்குழலியுடன் போய் வருகிறேன். எனக்கும் அந்த மந்திரவாதியைப் பார்க்க வேண்டிய காரியம் இருக்கிறது!" என்று சொல்லிவிட்டுப் பூங்குழலியைப் பின் தொடர்ந்து வேகமாக ஓடினான் வந்தியத்தேவன்.

**பூ**ங்குழலியின் மனக்கண் முன்னால் மந்திரவாதி மார்பளவு சேற்றில் புதைந்திருக்க, அவனைச் சுற்றி நரிகள் நின்று அவனைப் பிடுங்கித் தின்னப் பார்க்கும் பயங்கரக் காட்சி தோன்றிக் கொண்டிருந்தது. அதற்கிடையே இளவரசர் அவளைப் பார்த்து "பெண்ணே! நீ கொலை பாதகி!" என்று குற்றம் சாட்டும் காட்சியும் தோன்றியது! இந்தக் காட்சிகள் அவளுடைய கால்களுக்கு மிக்க விரைவைக் கொடுத்தன. மந்திரவாதியை அமிழ்த்திய சேற்றுப் பள்ளத்தை அதி விரைவில் நெருங்கினாள். அங்கே மந்திரவாதியைக் காணாமல் பெரும் ஏமாற்றம் அடைந்தாள்.

பின் தொடர்ந்து வந்த வந்தியத் தேவன் அவள் பக்கம் நெருங்கியதும், அவள் தயங்கி நிற்பதின் காரணத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

"வேறு ஒரு சேற்றுப் பள்ளமாயிருக்கலாம். கோடிக் கரையில் எத்தனையோ பள்ளங்கள் உண்டு அல்லவா? நீ மறந்து போயிருப்பாய்!" என்றான்.

புதரில் ஒரு முனை கட்டியிருந்த சேந்தன் அமுதனின் மேல்துண்டைப் பூங்குழலி சுட்டிக் காட்டினாள். பாவம்! அவளால் பேச முடியவில்லை.

"சேற்றிலே அமிழ்ந் திருப்பான் என்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை! ரவிதாஸனை அப்படியெல்லாம் கொன்று விட முடியுமா! அவனுக்கு நூறு உயிர் ஆயிற்றே! தப்பிப் போயிருப்பான்!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன் புதரில் கட்டப் பட்டிருந்த துண்டை அவிழ்த்து எடுத்துக் கொண்

டான். பூங்குழலிக்கு ஆறுதலாக அவ்விதம் சொன்னானே தவிர, அவன் மனதிற்குள் "ரவிதாஸன் மாண்டுதான் போயிருப்பான். அவனுக்கு இந்தக் கோர மரணம் வேண்டியதுதான்!" என்ற எண்ணம் தோன்றியது.

இருவரும் அங்கே மேலும் நிற்பதில் பயனில்லை என்பதை ஒருங்கே உணர்ந்தார்கள். மீண்டும் கால்வாயை நோக்கி நடந்தார்கள்.

கால்வாயின் கரைகளை அங்கே இருபுறமும் மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. ஒரு மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு நின்று இரண்டு உருவங்கள் எட்டிப் பார்த்தது தெரிந்தது.

அவற்றில் ஒன்று ஆண் உருவம்: இன்னொன்று பெண் உருவம்.

"அதோ!" என்று பூங்குழலி சுட்டிக் காட்டினாள்.

"ஆமாம்; அவர்கள் யார் என்று தெரிகிறதா?"

"மந்திரவாதி ஒருவன்; இன்னொருத்தி என் அண்ணன் மனைவி. எனக்கு முன்னால் அவள் வந்து மந்திரவாதியை விடுவித்திருக்கிறாள்."

"நல்லதாய்ப் போயிற்று!"

"நல்லது ஒன்றுமில்லை. கால்வாயில் படகு வருவதை அவர்கள் உற்றுப் பார்க்கிறார்களே!"

அச்சமயம் இரண்டு உருவங்களில் ஒன்று திரும்பி இவர்கள் வரும் திசையைப் பார்த்தது. உடனே இரண்டு உருவங்களும் புதர்களுக்கு அடியில் மறைந்து விட்டன.

"ஐயோ! அவர்கள் நம்மையும் பார்த்து விட்டார்கள்!"

"பேசாமல் என்னுடன் வா! நான் ஒரு யுக்தி செய்கிறேன். நான் என்ன சொன்னாலும் ஆச்சரியப் படாதே! என்னை ஒட்டியே பேசு!" என்றான் வந்தியத் தேவன்.

இருவரும் மேற்கூறிய உருவங்கள் நின்ற இடத்துக்குச் சமீபமாகப் போனார்கள். அந்த இடத்தைக் கடந்து சிறிது அப்பால் சென்று கால்வாயின் ஓரமாக உட்கார்ந்து கொண்டார்கள்.

பின்னால் புதரில் மறைந்திருந்தவர்களுக்குத் தங்கள் பேச்சு நன்றாய்க் கேட்கும் என்று வந்தியத்தேவன் நிச்சயப்படுத்திக் கொண்டான்.

"பூங்குழலி! இதோ பார்! ஏன் கவலைப்படுகிறாய்! மந்திரவாதி செத்து ஒழிந்து போனான். போனதே க்ஷேமம்!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயோ! என்ன பயங்கரமான சாவு!" என்றாள் பூங்குழலி.

"கொலை செய்தது செய்துவிட்டு, இது என்ன பரிதாபம்?"

"ஐயோ! நானா கொலை செய்தேன்?"

"பின்னே அவன் சேற்றில் விழச் செய்தது யார்? நீதானே? திடீரென்று அப்புறம் உனக்குப் பச்சாத்தாபம் வந்து விட்டது. தப்புவிக்கலாம் என்று வந்தாய்! அதற்குள் அவனைச் சேறு விழுங்கி விட்டது. தப்புவிக்கத்தான் வந்தாயோ, அல்லது செத்துப் போய் விட்டானா என்று பார்ப்பதற்குத்தான் வந்தாயோ, யார் கண்டது?"

"உன்னை யார் என்னைத் தொடர்ந்து வரச் சொன்னது?"

"வந்ததினால்தானே நீ செய்த கொலையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது? அடி கொலை பாதகி!"

"நானா கொலை பாதகி?"

"ஆம்; நீ கொலை பாதகிதான்! நான் மட்டும் யோக்கியன் என்று சொல்கிறேனா? அதுவும் இல்லை. நான் இளவரசரைக் கடலில் மூழ்க அடித்துக் கொன்றேன். நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றாய். அதற்கும் இதற்கும் சரியாய்ப் போய்விட்டது. நான் செய்த கொலையைப் பற்றி நீ வெளியில் சொல்லாமலிருந்தால், நீ செய்த கொலையைப் பற்றி நானும் யாரிடத்திலும் சொல்ல வில்லை!"

"இளவரசரைக் கொன்றவன் நீதானா? சற்று முன் அவரைப் பார்க்கவே யில்லை என்று சொன்னாயே?"

"வேண்டுமென்றுதான் அப்படிச் சொன்னேன். இனிமேல் அப்படி உன்னிடம் பொய் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நான் கூறியதை ஒப்புக் கொள்வாயா, மாட்டாயா?"

"மாட்டேன் என்று மறுத்தால்?"

"உடனே நந்தினி தேவியிடம் போய் நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றதைக் கூறுவேன். நான் செய்த கொலைக்குச் சாட்சியம் இல்லை; உன் கொலைக்குச் சாட்சியம் உண்டு......"

"நந்தினி என்னை என்ன செய்து விடுவாள்?"

"வேறொன்றும் செய்ய மாட்டாள். உன்னைப் பூமியில் கழுத்து வரையில்



புதைத்து யானையின் காலினால் இடறும்படி செய்வான்!"

"ஐயோ! என்ன பயங்கரம்!"

"வேண்டாம் என்றால், நான் கூறுகிறபடி செய்வதாக ஒத்துக் கொள்."

"என்ன செய்ய வேண்டும்?"

"அதோ உன் அத்தான் கொண்டு வருகிறானே, அந்தப் படகில் ஏறிக் கொள். இரண்டு பேரும் நேரே இலங்கைக்குப் போய் விடவேண்டும். அங்கே போய் உன் இளவரசரை நினைத்து அழுது கொண்டிரு!"

"எதற்காக நான் இலங்கை போக வேண்டும்? இங்கேயே இருந்தால் உனக்கு என்ன?"

"ஆ! நீ போய்ப் பழுவேட்டரையரிடம் என்னைப் பற்றிச் சொல்லிவிட்டால்!—அவருக்கு என்ன இருந்தாலும் இளவரசர் பேரில் அபிமானம் உண்டு. என்னைப் பழி வாங்கப் பார்ப்பார். எனக்கு இந்த உலகில் இன்னும் கொஞ்சம் வேலை இருக்கிறது."

"அடபாவி! இளவரசரை ஏன் நீ கொன்றாய்? அதையாவது சொல்லிவிடு!"

"சொன்னால் என்ன? நன்றாகச் சொல்லுகிறேன். இளவரசரும் அவருடைய தமக்கையும் சேர்ந்து ஆதித்த கரிகாலரின் இராஜ்யத்தைப் பறிப்பதற்குச் சதி செய்தார்கள். ஆதித்த கரிகாலர் என்னுடைய எஜமானர். அவருடைய விரோதி என்னுடைய விரோதி. அதனால்தான் இளவரசரைக்கொன்றேன். தெரிந்ததா?"

"இந்த மகாபாவத்துக்கு நீ தண்டனை அநுபவிப்பாய்."

"அதைப் பற்றி நீ கவலைப்படாதே! நான் சொன்னபடி நீ செய்யப் போகிறாயா, இல்லையா?"

"செய்யா விட்டால் வேறுவழி என்ன? அதோ படகு வருகிறது; போய் ஏறிக் கொள்கிறேன்."

"இதோ பார்! நன்றாய்க் கேட்டுக் கொள். படகில் ஏறியதும் நேரே கடலை நோக்கிச் செல்ல வேண்டும். கோடிக் கரைப் பக்கம் திரும்பினாயோ, உன் கதி அதோகதிதான். இங்கேயே இருந்து நான் உங்கள் படகைப் பார்த்துக் கொண்டிருப்பேன். படகு கடலை அடைந்த பிறகுதான் இங்கிருந்து நகருவேன்."

"சரி, சரி! இங்கேயே இரு! உன்னை நூறு நரிகள் பிடுங்கித் தின்னட்டும்!"

வந்தியத் தேவன் செய்த சமிக்ஞையைப் பார்த்துவிட்டுப் பூங்குழலி அங்கிருந்து விரைந்து போய்ப் படகில் ஏறிக் கொண்டாள்.

படகு மேலே சென்றது.

வந்தியத்தேவன் அவளிடம் கூறியபடி அங்கேயே உட்கார்ந்திருந்தான்.

அரை நாழிகை சென்றது.

படகு கால்வாயில் வெகு தூரம்வரைச் சென்று மறைந்தது.

திடீரென்று வந்தியத் தேவனுக்குப் பின்னால் "ஹா ஹா ஹா" என்ற ஒரு பயங்கரச் சிரிப்புக் கேட்டது.

வந்தியத் தேவன் திடுக்கிட்டவன் போல் பாசாங்கு செய்து, சட்டென்று எழுந்து நின்று பார்த்தான்.

மந்திரவாதி புதர்களுக்கு மத்தியில் எழுந்து நின்று பேய் சிரிப்பது போலப் பயங்கரமாகச் சிரித்தான்.

"ஐயோ! பிசாசு!" என்று அலறிக் கொண்டு வந்தியத் தேவன் அங்கிருந்து ஓட்டம் பிடித்தான்.

## அத்தியாயம் 9

# ஓடத்தில் மூவர்

பொழுது புலர்ந்தது. கருநிற அழகியான இரவெனும் தேவி உலகநாயகனை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து செல்ல நேர்ந்தது. நாயகனைத் தழுவியிருந்த அவளுடைய கரங்கள் இலேசாகக் கழன்று விழுந்தன. வாழ்க்கையிலேயே கடைசி முத்தம் கொடுப்பவளைப் போல் கொடுத்து விட்டு இரவெனும் தேவி இன்னமும் தயங்கி நின்றாள். "மாலையில் மறுபடியும் சந்திப்போம். நாலு ஜாம நேரந்தானே இந்தப் பிரிவு? சந்தோஷமாகப் போய் வா!" என்றது உலகம். இரவு தயங்கித் தயங்கி உலகத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்றது.

உள்ளத்திலே அன்பில்லாத கள்ளக் காதலனைப் போல் இரவு பிரிந்து சென்றதும் உலகம் மகிழ்ச்சியினால் சிலிர்த்தது. "ஆகா! விடுதலை!" என்று ஆயிரமாயிரம் பறவை இனங்கள் பாடிக் களித்தன. மரங்களிலும் செடிகளிலும் மொட்டுக்கள் வெடித்து மலர்ந்தன. எங்கிருந்தோ வண்டுகள் மந்தை மந்தையாக வந்து இதழ் விரிந்த மலர்களைச் சூழ்ந்து கொண்டு இன்னிசை பாடிக் களித்தன. விதவிதமான வர்ணச் சிறகுகள் உள்ள தட்டாரப் பூச்சிகள் நாலா பக்கங்களிலும் ஆனந்தக் கூத்தாடின.

கீழ் வானத்தில் பொன்னிறம் கண்டது. வானச் சுடர்கள் ஒவ்வொன்றாக ஒளி மங்கி மறைந்தன. இதுவரையில் வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்த பிறைச் சந்திரன் "நிற்கட்டுமா? போகட்டுமா?" என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

ஓடையில் படகு மெள்ள மெள்ளச் சென்று கொண்டிருந்தது. பட்சிகளின் கோஷ்டி கானத்தோடு துடுப்பு தண்ணீரைத் தள்ளும் சலசல சத்தமும் பூங்குழலியின் செவிகளில் விழுந்தது. திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஒரு குவளையில் வெடித்த இரண்டு அழகிய நீல நிற மொட்டுக்கள் ஒருங்கே மலர்ந்தது போல் அவளுடைய கண்ணிமைகள் திறந்தன. எதிரே இளவரசரின் பொன்முகம் தோன்றியது. இன்னும் அவர் தூங்கிக் கொண்டிருந்தார். தூக்கந்தானா? அல்லது சுரவேகத்தில் இன்னமும் உணர்ச்சியற்றிருக்கிறாரா? தெரியவில்லை. எனினும், அவருடைய திருமுகம் எவ்வளவு பிரகாசமாயிருந்தது?

அப்பால் சேந்தன் அமுதன் துடுப்புத் தள்ளிக் கொண்டிருந்தான்.



"பூங்குழலி! ஏன் அதற்குள் விழித்துக் கொண்டாய்? இன்னும் சற்று நேரம் தூங்குவதுதானே?" என்றான்.

பூங்குழலி புன்னகை பூத்தாள். முகத்திலிருந்த இதழ்களிலே மட்டும் அவள் புன்னகை செய்யவில்லை. அவளுடைய திருமேனி முழுதும் குறுநகை பூத்தது.

காட்டிலே பிறந்து வளர்ந்து வாழ்ந்தவள் பூங்குழலி. ஆயினும் பட்சிகளின் கானமும், வண்டுகளின் கீதமும் இவ்வளவு இனிமையாக அவளுடைய செவிகளில் என்றைக்கும் தொனித்ததில்லை.

"அத்தான்! உதய ராகத்தில் ஒரு பாட்டுப் பாடு!" என்றாள் பூங்குழலி.

"நீ இருக்குமிடத்தில் நான் வாயைத் திறப்பேனா? நீதான் பாடு!" என்றான் சேந்தன் அமுதன்.

"இராத்திரி இருளடர்ந்த காட்டில் பாடினாயே?"

"காரிய நிமித்தமாகப் பாடினேன். இப்போது நீ பாடு!"

"எனக்கும் பாட வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. ஆனால் இளவரசருக்குத் தொந்தரவாயிருக்குமல்லவா?"

"எனக்குத் தொந்தரவு ஒன்றுமில்லை. இரண்டு பேரும் சேர்ந்து பாடுங்கள்!" என்றார் அருள்மொழி வர்மர்.

பூங்குழலி வெட்கத்தினால் தலை குனிந்து கொண்டாள்.

"படகு எங்கே போகிறது?" என்று இளவரசர் கேட்டார்.

"நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்திற்கு!" என்றாள் பூங்குழலி.

"அப்படியானால், இராத்திரி நான் கண்டது கேட்டதெல்லாம் கனவல்லவா? உண்மைதானா?"

"ஆம், ஐயா! இதோ இவர்தான் தங்கள் தமக்கையாரிடமிருந்து செய்தி கொண்டு வந்தவர்."

"இளைய பிராட்டி கூறியதையெல்லாம் விவரமாகச் சொல்லு, அமுதா! என்னைப் புத்த சங்கத்தில் சேர்ந்து விடும்படிதானே என் தமக்கை சொல்லி அனுப்பினார்?"

இதற்கு என்ன விடை சொல்லுவதென்று அமுதன் தயங்கியபோது, குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. பூங்குழலியும் சேந்தன் அமுதனும் திடுக்கிட்டார்கள்.

இளவரசரின் முகத்தில் மட்டும் ஒரு மாறுதலும் இல்லை.

"என் நண்பன் எங்கே? வாணர் குலத்து வீரன்?" என்று இளவரசர் கேட்டார். கேட்டு விட்டுக் கண்களை மூடிக் கொண்டார்.

சிறிது நேரத்துக்குள் குதிரை மீது வந்தியத்தேவன் தோன்றினான்.

படகு நின்றது.

வந்தியத்தேவனும் குதிரை மீதிருந்து இறங்கி வந்தான்.

"ஒன்றும் விசேஷமில்லை. நீங்கள் பத்திரமாயிருக்கிறீர்களா என்று பார்த்து விட்டுப் போக வந்தேன். இனி அபாயம் ஒன்றுமில்லை" என்றான் வந்தியத்தேவன்.

"மந்திரவாதி?" என்று பூங்குழலி கேட்டாள்.

"இந்தப் படகில் இளவரசர் இருக்கிறார் என்ற சந்தேகமே அவனுக்கில்லை. நான் கூறியதை அவன் அப்படியே நம்பிவிட்டான்."

"அவனைப் பார்த்தாயா?"

"பார்த்தேன்; ஆனால் அவனுடைய பிசாசைப் பார்த்ததாகப் பயந்து பாசாங்கு செய்தேன்."

"உன்னைப் போல் பொய் சொல்லக் கூடியவனை நான் பார்த்ததேயில்லை."

"பொய் என்று சொல்லாதே! கற்பனா சக்தி என்று சொல்லு. இளவரசர் எப்படியிருக்கிறார்?"

"நடு நடுவே விழித்துக் கொண்டு இரண்டு வார்த்தை சொல்கிறார். அப்புறம் நினைவு இழந்து விடுகிறார்."

"இந்தச் சுரமே அப்படித்தான்."

"எத்தனை நாளைக்கு இருக்கும்?"

"சில சமயம் ஒரு மாதங்கூட இருக்கும். சூடாமணி விஹாரத்தில் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். பிக்ஷுக்கள் வைத்தியம் செய்தால் இரண்டு வாரத்தில் குணப்படுத்தி விடுவார்கள். ஜாக்கிரதை! பூங்குழலி! உன்னை நம்பித்தான் இளவரசரை ஒப்படைத்து விட்டுப் போகிறேன். உன் அத்தான் எங்கேயாவது கோவில் கோபுரத்தைக் கண்டால் தேவாரம் பாடிக் கொண்டு சுவாமி தரிசனத்துக்குப் போய் விடுவான்!"

சேந்தன் அமுதன் "உன்னோடு பழகிய பிறகு அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். சிவ கைங்கரியம் செய்யும் ஆசை கூட எனக்குக் குறைந்து விட்டது!" என்றான்.

"என்னால் குறைந்து விட்டதா? அல்லது இந்தப் பெண்ணினாலா? உண்மையைச் சொல்!"

சேந்தன் அமுதன் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் "குதிரையை

நான் சொன்ன இடத்தில் கண்டு பிடித்தாயா?" என்று கேட்டான்.

"குதிரை என்னைக் கண்டு பிடித்தது. இது நான் உன்னிடம் தஞ்சையில் விட்டு வந்த குதிரை அல்லவா?"

"ஆமாம்."

"இருட்டில் இது அடர்ந்த காட்டுக்குள்ளே என்னைப் பார்த்துவிட்டுக் கனைத்தது. அராபியர்களிடம் நான் அகப்பட்டுக் கொண்டதில் ஒரு விஷயம் தெரிந்து கொண்டேன், அமுதா! குதிரைகளை வெறுங் காலோடு ஓடச் செய்வது பாவம்! குளம்புக்கு அடியில் இரும்புக் கவசம் அடித்து ஓட்ட வேண்டும். முதன் முதலில் நான் பார்க்கும் கொல்லுப் பட்டறையில் இதன் குளம்புக்குக் கவசம் அடிக்கச் சொல்லப் போகிறேன். சரி, சரி! அதையெல்லாம் பற்றிப் பேச நேரமில்லை. மறுபடியும் உங்களையும் இளவரசரையும் பார்ப்பேனோ, என்னமோ, தெரியாது. இளவரசர் மறுபடி விழித்தால் நான் பழையாறைக்குப் போகிறேன் என்று சொல்லுங்கள். அங்கிருந்து விரைவில் செய்தி அனுப்புவதாகவும் சொல்லுங்கள். அப்போதுதான் நிம்மதியாக இருப்பார்."

வந்தியத்தேவன் குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு போனான். விரைவில் இவர்களுடைய பார்வையிலிருந்து அவன் மறைந்தான்.

இருபுறமும் தாழம்புதர்கள் அடர்ந்திருந்த ஓடைக்காலின் வழியாகப் படகு போய்க் கொண்டிருந்தது. பொன்னிறத் தாழம் பூக்களும், தந்த வர்ண வெண் தாழம்பூக்களும் இரு பக்கமும் செறிந்து கிடந்தன. அவற்றின் நறு மணம் போதையை உண்டாக்கிற்று. சில இடங்களில் ஓடைக் கரையில் புன்னை மரங்கள் வளர்ந்திருந்தன. சில இடங்களில் கடம்ப மரங்களும் இருந்தன. முத்து நிறப் புன்னை மலர்களும் குங்கும வர்ணக் கடம்ப மலர்களும் ஓடைக் கரைகளில் சொரிந்து கிடந்தன.

பூலோகத்திலிருந்து புண்ணியசாலிகள் சொர்க்கத்துக்குப் போகும் பாதை ஒன்று இருந்தால், அது இப்படித்தான் இருக்கும் என்று பூங்குழலிக்குத் தோன்றியது.

இடையிடையே கிராமம் தென்பட்ட இடத்தில், சேந்தன் அமுதன் சென்று இளவரசருக்குப் பாலும் பூங்குழலிக்கு உணவும் வாங்கிக் கொண்டு வந்தான்.

இளவரசர் கண்விழித்த போதெல்லாம் பூங்குழலி சற்று விலகி நின்றாள். நேருக்கு நேர் அவரைப் பார்க்க முடியாமல் அங்குமிங்கும் பார்த்தாள். அவர் உணர்விழந்திருந்த நேரங்களில் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். சேந்தனுடன் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டுமிருந்தாள். சில சமயம் இரண்டு பேரும் சேர்ந்து பாடிக் களித்தார்கள்.

சேந்தன் அமுதன் உணவு தேடிக் கிராமங்களுக்குச் சென்ற சமயங்களில் பூங்குழலி இளவரசரின் நெற்றியைத் தடவிக் கொடுத்தும் தலையைக் கோதி விட்டும் பணிவிடை செய்தாள். அப்போதெல்லாம் அவள் உள்ளம் பொங்கி, உடல் சிலிர்த்து, பரவச நிலையிலிருந்தாள்.

இம்மாதிரி அவள் எத்தனை எத்தனையோ பூர்வ ஜன்மங்களில் அவருக்குப் பணிவிடை செய்தது போன்ற உணர்வு தோன்றியது. உருவமில்லாத ஆயிரமாயிரம் நினைவுகள் இறகுகளைச் சடசடவென்று அடித்துக்கொண்டு அவளுடைய உள்ளத்தில் கும்பல் கும்பலாகப் புகுந்து வெளியேறிக் கொண்டிருந்தன.

ஒரு பகலும் ஒரு இரவும் அவர்கள் அந்த ஓடைக் கால் வழியாகப் படகில் சென்றார்கள். பூங்குழலியும் சேந்தனும் முறை போட்டுக் கொண்டு அவ்வப்போது சிறிது நேரம் கண்ணயர்ந்தார்கள். கண்ணயர்ந்த நேரத்திலும் உருவந் தெரியாத இன்பக் கனவுகள் பலவற்றைப் பூங்குழலி கண்டாள்.

மறு நாள் சூரியோதய நேரத்தில், உலகமே பொன்னிறமாக ஜொலித்த வேளையில், படகு நாகைப் பட்டினத்தை அடைந்தது. நாகைப்பட்டினத்தின் அருகில் அந்த ஓடையிலிருந்து ஒரு கிளை பிரிந்து சூடாமணி விஹாரத்திற்கே நேராகச் சென்றது. அந்தக் கிளை வழியில் படகைக் கொண்டு போனார்கள். புத்த விஹாரத்தின் பின்புறத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

அச்சமயம் அந்தப் புகழ் பெற்ற சூடாமணி விஹாரத்தில் ஏதோ குழப்பம் நேர்ந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. விஹாரத்தின் வாசலில் ஜனக் கூட்டத்தின் இரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. பிக்ஷுக்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

படகிலிருந்த மூவரும் கரையில் இறங்கினார்கள். சேந்தன் அமுதன் தான் விஹாரத்துக்குச் சென்று குழப்பத்தின் காரணம் என்னவென்று தெரிந்து வருவதாகச் சொல்லி விட்டுப் போனான்.

# எந்தக் கட்சியை ஆதரிப்பது?

ரஜனி

கொழும்பு, பிப்ரவரி 16உ—

இலங்கை இந்திய காங்கிரஸின் வருடாந்திர மகாநாட்டை அடுத்த ஏப்ரல் மாதத்தில் நடத்துவதென்று தீர்மானித்திருக்கிறார்கள். மகாநாட்டை எந்த இடத்தில் நடத்துவதென்பதையும் மகாநாட்டுக்கு இந்தியாவிலிருந்து யாரையேனும் அழைப்பதா என்பதையும் அடுத்த மாதம் நடக்கும் அகில இலங்கை காங்கிரஸ் கமிட்டியே முடிவு செய்ய வேண்டும்.

இந்திய காங்கிரஸின் அமைப்புத் திட்டம் இலங்கையும் இந்தியாவும் அந்நிய ஆட்சியின் கீழிருந்தபோது தயாரிக்கப்பட்டது. இப்போது இரு நாடுகளும் சுதந்திரம் பெற்றுவிட்டபடியினால் புதிய சூழ்நிலையைத் தழுவிக் காங்கிரஸின் அமைப்பு விதிகளையும் மாற்றி யமைக்க வேண்டுமெனப் பொதுவாகக் கருதப்பட்டு வருகிறது. இலங்கை இந்திய காங்கிரஸ் என்பதற்குப் பதிலாக இலங்கை சோஷலிஸ்ட் காங்கிரஸ் என்று பெயரையே மாற்றிவிட வேண்டுமென சென்ற ஆண்டிலேயே ஒரு யோசனை இருந்து வந்தது.

இந்தியர்களில் அனேகர் பிரஜாவுரிமைச் சட்டத்தின் பிரகாரம் இவ்வருடம் இலங்கைப் பிரஜைகளாகி யிருக்கிறார்கள். அல்லாமலும் காங்கிரஸ் தொழிலாளர் யூனியனுடைய இலங்கை தொழிலாளர் காங்கிரஸில் பல ஆயிரம் இலங்கையர்களும் சிங்களவர்களும் கூட அங்கத்தினர்களாகச் சேர்ந்திருக்கிறார்கள். சில தோட்டங்களிலே சிங்கள தொழிலாளர் தலைவர்கள் காங்கிரஸ் இலட்சியங்களுக்காகவும் கொள்கைகளுக்காகவும் அதிதீவிரமாக வேலை செய்கின்றனர். படிப்படியாக தேசிய முக்கியத்துவம் பெற்றுவிட்ட காங்கிரஸை ஜாதி மத பேதமற்ற ஸ்தாபனமாக வைத்திருப்பதற்குப் பதிலாக, அதை ஒரு இந்திய ஸ்தாபனமாக தொனிக்கச் செய்வது தவறென்று தலைவர்களுக்கிடையே ஒரு அபிப்பிராயமிருந்து வருகின்றது.

இவ்வாண்டில் இலங்கையிலே பொதுத் தேர்தல்கள் நடைபெற விருப்பதினாலும் பெரும்பாலான இந்தியத் தொழிலாளர்களுக்குத் தேர்தலில் வாக்குரிமை யிருக்காததாகையினாலும், எந்த அரசியல் கட்சிக்குத் தங்கள் ஆத்மீகமான ஆதரவை அளிப்பதென்பதைக் குறித்தும் வருடாந்திர மகாநாடு முடிவு செய்ய வேண்டி யிருக்கும்.

## ராஜாஜிக்கு அழைப்பு

இலங்கை இந்தியர்களின் விவகாரங்களில் ராஜாஜியைப் போல வேறு இந்தியத் தலைவர்களில் யாருக்கும் அவ்வளவு அக்கறையும் அனுதாபமும் இருந்ததில்லை. இலங்கை இந்தியர்களில் 100க்கு 99 பேர்கள் தென்னாட்டுத் தமிழர்களாகையினால் அவர்களிடம் மற்றவர்களை விட ராஜாஜிக்கு அதிக அக்கறையும் சிரத்தையுமிருப்பது இயற்கையேயாகும். காங்கிரஸின் முந்திய மகாநாடுகளின் பொழுதெல்லாம் ராஜாஜிக்கு இந்தியாவில் பொறுப்பும் வேலையும் அதிகமிருந்தன. ஆகையினால் மனப்பூர்வமாக அவர் விரும்பினால்கூட இலங்கைக்கு வரமுடியாமல் அவருக்குக் கைக்கட்டு கால்கட்டுகளிருந்தன. இப்பொழுதோ நிலைமை முற்றிலும் வேறு. ஆகவே இவ்வருட மகா நாட்டுக்குத் தமிழகத்தின் ராஜ ரிஷியைத் தருவிக்க வேண்டுமென தலைவர்களுக் கிடையில் ஒரு யோசனை இருந்து வருவதாகத் தெரிகிறது. பலவித அடக்குமுறைச் சட்டங்களினாலும் நம்பிக்கை இழந்து தவிக்கும் இலங்கை இந்தியச் சமூகத்துக்கு ராஜாஜியின் தரிசனம் புதிய ஊக்கத்தையும் தன்னம்பிக்கையையும் கொடுப்பதாயிருக்குமென்று பொதுவாக எல்லோரும் நினைக்கிறார்கள்.

## தமிழரசுக் கட்சியின் பொறுப்பு

இந்தியர்களின் ஓட்டுரிமை பறிக்கப்பட்டு விட்டபடியினால் தமிழ் அரசுக் கட்சிக்கு ஒரு புதிய பெரிய பொறுப்பு ஏற்பட்டிருப்பதாயும் அந்தப் பொறுப்பைத் தமிழரசுக் கட்சி திருப்திகரமாக நிறைவேற்றி வைக்குமென்பதை இந்தியத் தமிழர்கள் உறுதியுடன் நம்பலாமென்றும் ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம் ஒரு அறிக்கை விட்டிருக்கிறார். அதில் மேலும் கூறுவதாவது:—

"அரசாங்கத்தின் பிரஜாவுரிமைச் சட்டத்தினாலும் ஓட்டுரிமைச் சட்டத்தினாலும் பெரும்பாலான இந்தியர்களுக்கு ஓட்டுரிமையில்லாமற் போய் விட்டது. ஆகவே அவர்கள் அடுத்த பார்லிமெண்டில் தங்களுக்கு விருப்பமான பிரதிநிதிகளைப் பெற்றிருக்க முடியாது. இந்தியர்களுடைய ஓட்டு பலத்தைக் கொண்டு ஒரு இந்தியப் பிரதிநிதியும் பார்லிமெண்டுக்குத் தெரிவு செய்யப்பட முடியாது. ஆகவே அரசியல் அனாதைகளாக்கப்பட்டு விட்ட லட்சக்கணக்கான இந்தியத் தமிழ்த் தொழிலாளர்களின் நலவுரிமைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு, தமிழ் இனத்தின் நலவுரிமைக்குப் பாடுபடும் தமிழரசுக் கட்சியை வந்தடைந்திருக்கிறது. இந்தப் பொறுப்பைத் தமிழரசுக் கட்சி திருப்திகரமாக நிறைவேற்றி வைக்குமென்று நம்பலாம்."

## ஸாதனுபோஸின் ஓவியங்கள்

இம்மாதம் 23-ம் தேதியிலிருந்து ஆரம்பித்து ஒரு மாத காலம் வரையில் நடைபெற விருக்கும் கொழும்புத் திட்டப் பொருட் காட்சிக்கு இந்தியாவிலிருந்து பல அற்புதமான காட்சிப் பொருள்கள் வந்திருக்கின்றன. வெண்கலம், தந்தம், காசிப்பட்டு, பருத்திநூல் ஆகியவற்றினால் செய்த அனேகம் குடிசைத் தொழில் பொருள்களை உத்தரப் பிரதேச அரசாங்கம் அனுப்பி வைத்திருக்கிறது. ஸ்ரீ ஆர். எஸ். மாதுர், ஸ்ரீ ஆர். எஸ். ஸ்ரீவத்ஸவா ஆகிய இரண்டு அரசாங்க அதிகாரிகளும் உத்திரப் பிரதேசத்திலிருந்து வந்திருக்கிறார்கள். பம்பாய் சர்க்காரின் கிராமீயக் கிளர்ச்சி ப்ரசாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவற்றின் மாடல்களைப் பம்பாய் அனுப்பியிருக்கிறது. கவியரசர் தாகூரின் சாந்திநிகேதனிலிருந்து உலகப் பிரசித்திபெற்ற ஸாதனுபோஸின் வர்ண ஓவியங்கள் உள்பட சுமார் 30 அற்புதமான ஓவியங்களும் பொருட் காட்சியில் வைப்பதற்காக வந்திருக்கின்றன.

பொருட் காட்சியைத் திறந்து வைக்கும் தினத்தன்று கொழும்பில் குமாரி கமலாவின் பரத நாட்டியக் கச்சேரியும் நடைபெறுகின்றது. காட்சி காலத்தில் இந்தியாவிலிருந்து வரும் யாத்ரீகர்களுக்குத் தடையில்லாமல் மூன்று மாத காலத்துக்கு இலங்கையிலிருக்க விஸா கொடுக்கும்படி மண்டபம், திருச்சி, தூத்துக்குடி ஆகிய இடங்களிலுள்ள இலங்கை இமிகிரேஷன் அதிகாரிகளுக்குச் சர்க்கார் விசேஷ உத்தரவு பிறப்பித்திருக்கிறது.

# தாய் உள்ளம்

இப்பொழுது நடைபெறுகிறது

| | | | | |
|---|---|---|---|---|
| சென்னை | : காஸினோ, பிரபாத், ஸரஸ்வதி | | புதுச்சேரி | : கமர்ஷியல் |
| மதுரை | : சிந்தாமணி | | ஈரோடு | : ராஜாராம் |
| கோயமுத்தூர் | ராஜா | | திண்டுக்கல் | : என்.வி.ஜி.பி. |
| திருச்சி | : வெலிங்டன் | | விருதுநகர் | : நியூ முத்து |
| பெங்களூர் | : ஸ்வஸ்திக், சாரதா, ரூப் மஹால் | | மங்களூர் | : பாலாஜி |
| சேலம் | : ஓரியண்டல் | | நாகர்கோவில் | : ஸ்ரீ கிருஷ்ணா |
| கும்பகோணம் | டயமண்ட் | | திருவனந்தபுரம் | நியூ தியேட்டர் |
| தஞ்சாவூர் | : நியூ டவர் | | ஆலப்புழை | : சீமாட்டி |
| மைசூர் | சாமுண்டீஸ்வரி, கணேஷ் | | கொல்லம் | : லக்ஷ்மி |
| காரைக்குடி | : சரஸ்வதி | | கோட்டயம் | : சென்ட்ரல் |
| வேலூர் | : தாஜ் | | எர்ணாகுளம் | : பத்மா |
| காஞ்சீபுரம் | : ராஜா | | கண்ணனூர் | : ஜவஹர் |
| | | | தென்காசி | ஸ்ரீ பாக்யலக்ஷ்மி |
| | | | திருப்பாப்புலியூர் | நியூ சினிமா |
| | | | திருநெல்வேலி | ராயல் |

## நாராயணன் கம்பெனி வெளியீடு

# பிரபல திருமணம்



**பிரேம குமாரி — சுவாமிநாதன்**

கோயமுத்தூர் ஜில்லாவின் பிரபல தொழிலதிபரும், ஜில்லா ஸ்கௌட்ஸ் கமிஷனருமான ஸ்ரீ ஏ. டி. தேவராஜ முதலியார் அவர்களின் ஏக புதல்வி செல்வி பிரேம குமாரிக்கும், திவான் பகதூர் சி. எஸ். இரத்தின சபாபதி முதலியார் அவர்களின் பேரனும் ஸ்ரீ சி. ஆர். சதாசிவ முதலியார் அவர்களது குமாரனுமான செல்வன் சி. எஸ். சுவாமிநாதனுக்கும் சென்ற மாதம் 31-1-52 அன்று மணமகள் இல்லமாகிய கோவை, "ரத்னாலய"த்தில் சிறப்பாக விவாகம் நடந்தேறியது. 30-1-52 அன்று இரவு குமாரி அநுசூயாவின் பரதநாட்டியம் நடந்தது. மணமகன் மணமகள் இல்லத்துக்குச் சென்றபோது அலங்கரித்த யானை, மங்கள வாத்தியங்கள் முழங்க முன்னணியில் சென்றது.

மணப் பந்தல், வர்ண விசித்திர தீபாலங்காரம் செய்யப்பட்டுப் புஷ்பச் சோலையாகக் காட்சி யளித்தது. மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. மைசூர் மகாராஜா அவர்கள் ஒரு விலை உயர்ந்த மோதிரமும் பட்டாடைகளும் பரிசாக அனுப்பி யிருந்தார்கள். மறு தினம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. ஐயாயிரம் மக்களுக்கு மேல் கூடி யிருந்தனர். ஆயிரத்துக்கு மேற்பட்ட கார்கள் காம்பௌண்டைச் சுற்றியும் வீதியிலும் நிறைந்திருந்தன. போலீஸார் ஜன நெருக்கடியைத் திறமையாகச் சமாளித்து வண்டிப் போக்கு வரத்தை ஒழுங்காகக் கவனித்தனர். கச்சேரியில் ஒலிபரப்பி ஏற்பாடுகள் முதல்தரமாக அமைந்திருந்தன.

டாக்டர் எம். ஆர். குருசாமி முதலியார் (மணமகனின் பாட்டனார்), ஸர் ஏ. ராமசாமி முதலியார், அவரது மனைவியார், ஸர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார், அவரது மனைவியார் முதலிய பந்துக்களும், ஸர் பி. டி. ராஜன், ஸ்ரீ டி. ஜி. சஞ்சீவிப் பிள்ளை (போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்), ஸ்ரீ வி. ஆர். ராஜரத்தின முதலியார் (டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல்) முதலிய பிரபல நண்பர்களும் திருமண விழாவிற்கு விஜயம் செய்து சிறப்பித்தனர்.




## 26

க்ஷேமம் உனக்குச் சொல்லுவேன்
காமம் வேண்டாம் கோபம் வேண்டாம்
ஆபத்தினின்று தப்புவாயேல்
அகற்றுவாய் லோபத்தை ஒழிப்பாய் மோகத்தை
இந்த நான்கையும் ஒழிக்க மகனே
சிந்திப்பாய் நான் என்னும் பொருளை.
உண்மை ஞானம் அடையாப் பேதையர்
இம்மையிலும் வேகுவார் நரகத்தில்.

* * *

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாத்மானம் பாவய கோஹம்
ஆத்ம ஞான விஹீனா மூடா:
தே பச்யந்தே நரக நிகூடா:

மனிதன் உள்ளத்தில் ஒரு ஆசை உண்டாகிறது. அதைத் தீர்த்துக்கொண்டால் பிறகு சுகமாக இருக்கலாம் என்று எண்ணுகிறான். அதற்காகப் படாத பாடு படுகிறான். ஆனால் ஆசையின் படிகளுக்கோ முடிவேயில்லை; முடிவில்லை என்று அறிந்து கொள்வதற்கும் அது இடம் தராது. சுற்றும் சக்கரவட்டமான ஒரு ஏணியின்மேல் ஏறப் பார்க்கிறோம். ஏற ஏறச் சக்கரம் கீழே போகிறது. மேலே ஏறுவது போல் தோன்றும். ஆனால் ஒரு படி ஏறியதும் ஏறிய படி கீழே போய்விடும். புதுப்படி வந்து நிற்கும். படிகளுக்கு முடிவேயில்லை, சிரமத்திற்கும் முடிவேயில்லை. சாகும் வரை ஏறுவதே வேலை.

ஆசை தீர்த்துக் கொள்ளப் பார்க்கும் போது தடை ஏற்படும். அதனால் கோபம் கிளம்புகிறது. மனிதனுக்குக் கோபம் என்பது கெட்ட ஒரு பகை. அதனால் துவேஷம் உண்டாகிறது. பிறருக்கும் துன்பம்; தனக்கும் துன்பம். துன்பப் பட துன்பப்படக் கோபம் அதிகரிக்கும். உடலில் ஒரு நோய் வந்தால் அது தொந்தரவு செய்து விட்டுப் பிறகு ஓய்ந்து போகிறது. இது நோயின் இயல்பு—கோபம் அவ்வாறல்ல. துன்பம் உண்டாக்கி, உண்டாக்கி வளர்ந்துகொண்டே போகும். ஓயாது.

ஆசைகள் பலவிதம். சில ஆசைகளைச் சொல்லிக் கொள்ள வெட்கப்படுவோம். சில ஆசைகளை மிகப் பெருமையாகக் காட்டிக் கொள்ளுவோம். ஆனால் அவற்றின் குணம் எல்லாம் ஒன்றே! எவ்வளவு விறகு போட்டாலும் அந்த நெருப்பு எரிந்து கொண்டேயிருக்கும். நீனி போட்டு அணைக்க முடியாது. இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்றே கேட்கும்.

இன்பம் நுகரும் புலன்களின் சக்திக்கு ஒரு வரம்பு உண்டு. ஆனால் சக்தி தீர்ந்து போனாலும் ஆசை தீராது. இது ஒரு பெரும் வியப்பு. புலன்களின் சக்தி குன்றி முடிந்து போனாலும் ஆசைக்கு இறுதியேயில்லை. அது வேதனை செய்து கொண்டேயிருக்கும்.

பொருளாசைக்கு சமஸ்க்ருதத்தில் **லோபம்** என்று பெயர். கலவியின்ப விருப்பத்தினால், உண்டாகும் மனக்கலக்கத்துக்கு **காமம்** என்று பெயர். **குரோதம்** இவை யிரண்டினின்றும் வளரும். குரோதத்தினின்று எல்லாவித பாவங்களும் உண்டாகும். கோபம் என்பது மனிதனை

कामम् क्रोधम् लोभम् मोहम्
त्यक्त्वात्मानम् भावय कोऽहम् ।
आत्मज्ञानविहीना मूढाः
ते पच्यन्ते नरकनिगूढाः ॥

எதையும் செய்யச் சொல்லும். அவனுடைய விவேகத்தை அழித்து விட்டு மனிதனை மிருகமாக்கி விடுகிறது.

அதருமமான ஒரு ஆசை மனத்தில் உற்பத்தி ஆகும்போதே தாமதமின்றி அதை அப்போதே அகற்றவேண்டும். "போ!" என்றால் போகாது. நம் உள்ளத்தை வேறு விஷயத்தில் செலுத்த வேண்டும். அப்படிச் செய்தால்தான் அதற்கு இடமில்லாமல் விலகும். வேறு நல்ல எண்ணங்கள் எண்ணினால் கெட்ட எண்ணம் உள்ளே புகுவதற்கு வழி அடைபட்டுப் போகும். உள்ளத்தினுடைய அமைப்பின் பெரிய ரகசியம் இது. மனிதன் உள்ளம் உலகமெல்லாம் பாயும், ஆனால் ஒரே சமயத்தில் அதனில் இரண்டுக்கு இடமில்லை. எந்த விஷயமும் மனம் முழுதையும் நிறைத்து விடுகிறது. ஒன்றை வைத்துக்கொண்டு மனத்தைப் பூரணமாக அதில் செலுத்தினால் மற்றொன்று தானாகவே அகற்றப்படும்.

இந்த ரகசியத்தைப் பயன்படுத்திக் கொண்டு தீய எண்ணங்கள் ஆசைகள் இவற்றை அகற்ற வேண்டும். கொஞ்சம் இடம் கொடுத்தோமோ கெட்டோம், 'நம்முடைய உள்ளத்தினுக்குள் மறைந்தல்லவோ இருக்கிறது? இது யாருக்கும் தெரிய வேண்டியதில்லை' என்று அலட்சியம் செய்தோமோ நிச்சயம் கெட்டுப் போவோம். அதற்கு அடிமையாகிப் போவோம். பிறகு உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொள்ளும். மனத்தில் இடம் பெற்ற எண்ணம் காரிய ரூபமாகி விடுவது மிக எளிது. காரியமாகத் தோற்றமெடுக்கா விட்டாலும் அசுத்த எண்ணமே பெரும் பாவம். நம்முடைய உள்ளத்தின் சுத்தியை நாசம் செய்து தீர்க்கும். ஆண்டவன் இருக்கும் இடத்தை அசுத்தப்படுத்தி, கோயிலைத் தீட்டாக்கிய பெரும் பாவம் செய்தபடியாகும்.

பாட்டில் காமம், குரோதம், லோபம், மோகம் என்று சொல்லப்பட்ட நான்கினில் **மோகம்** என்பது என்னவென்றால், உலக வாழ்க்கையில் பொருள்களுக்கு நாம் இடும் தவறான மதிப்புகள் - இது மேன்மை, இது தாழ்மை, உண்மையான சுகம் இது தரும், இது தராது, இது நல்லது, இது கெட்டது, இது விரும்பத் தக்கது, இது வெறுக்கத் தக்கது என்று பொருள்களின் உண்மை குணங்களை அறியாமல், கடையில் குழந்தையோ அல்லது உலக அனுபவமில்லாத ஆணோ பெண்ணோ போய் சாமான்கள் வாங்கினால் எப்படி வெளித் தோற்றத்தைப் பார்த்து மோசம் போவார்களோ அதைப் போல் நாம் பிழைகள் செய்து பயனற்ற பொருள்களுக்குப் பாடு பட்டும் சுகம் தரும் வழியை விட்டுவிட்டு வாழ்க்கை நடத்துகிறோம். மக்களுடைய புகழுரைக்கு மிக ஆசைப்படுகிறோம், அவற்றில் சாரமில்லை என்று தெரியும். அந்தப் பேச்சுக்கள் பொய்யென்று நன்றாக அறிந்திருந்தாலுங்கூட அதில் ஏதோ நன்மையிருப்பதாக எண்ணி அதற்காக வெகுவாகப் பாடுபடுகிறோம்.

இதைப் போலவே வேறு பல விஷயங்களும். பொருள்களின் உண்மை மதிப்பு அறியாமல் பொய்யான விலையிட்டு நஷ்டப் படுவதற்குப் பெயர் **மோகம்.**

காமம், குரோதம், லோபம், மோகம் என்பவை யெல்லாம் ஆசை என்னும் ஒரு பிசாசின் பல உருவங்கள். ஆசை என்றால் புலன்கள் வழியாக அடையும் மகிழ்ச்சிகளை விரும்புவதற்குப் பெயர். தருமத்துக்கு விருத்தமாகாத ஆசையைப் பற்றிச் சொல்லவில்லை. தருமத்துக்கு முரண்படாத விருப்பங்களை நீக்க வேண்டியதில்லை. உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய கடமைகளைச் சரியாகச் செய்து தீர்ப்பதற்கு உள்ளத்தில் உண்டாகும் விருப்பமும் உற்சாகமும் காமம் அல்ல. அந்த ஆசை தருமத்துக்குப் பகையல்ல. தருமத்துக்கு இசைந்த விருப்பம். இத்தகைய நல்ல ஆசை பரம்பொருளின் அம்சமேயாகும். அதுவே நம்முடைய உள்ளத்தின் ஆன்ம சக்தி. உலகெலாம் பரவி நிற்கும் பார சக்தியின் வேகத்தில் அதுவும் ஒரு பாகம். கீதையில் அருச்சுனனுக்குக் கண்ணன் சொல்லுகிறான் :

"காமமும் ரஜோவேகமும் நீங்கிய பலம் மனிதர்களிடத்தில் கண்டால் அந்த பலம் நானே என்று அறிவாய். தருமத்துக்கு முரண்படாத ஆசை மனிதர்களின் உள்ளத்தில் தோன்றினால் அந்த ஆசை நானே என்று அறிவாய்."

தருமத்துக்கு முரண்படாத நல்ல விருப்பங்களெல்லாம் ஈசனுடைய அம்சமாகவே கருத வேண்டும்.

மேலும் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. இதுவும் பகவத் கீதையில் மிக அழுத்தத்துடன் சொல்லப் பட்டிருக்கிறது. எல்லாக் குற்றங்களை

யும் அறவே ஒழிக்க முடியவில்லை என்று பயந்து எத்தனம் செய்வதையே விட்டுவிடக் கூடாது.

மனத்தை நல்ல வழியில் நிறுத்த முயற்சி செய்தால் அந்த முயற்சி சில சமயம் பயனடையாதிருந்தாலும் மொத்தத்தில் அந்த முயற்சியே நல்ல பயன் தரும். எல்லாக் குற்றங்களையும் நீக்கு என்று சங்கராச்சாரியார் சொல்லுகிறார். அது முடிய வில்லையாயினும் முயற்சி செய்ததே போதும். அந்த அளவுக்கு நிச்சயமாகப் பயன் தரும். ஒரு பாவ எண்ணத்தில் ஏமாந்து போகலாம். ஆனால் அந்த முயற்சியின் பயனாகப் பத்து பாவத்தினின்று மீள்வோம். முயற்சியே உள்ளத்துக்குப் பலம் தருகிறது.—தேகப் பயிற்சி உடலுக்குப் பலம் தருவது போல். இது இயற்கை உண்மை.

இந்த முயற்சிக்கு வழியும் சங்கராச்சாரியார் பாட்டில் காட்டியிருக்கிறார். "நான் யார்?" என்கிற கேள்வியை அடிக்கடி கேட்டுச் சிந்திப்பாய் என்கிறார். இந்தச் சிந்தனை மனத்தில் வேலை செய்து கொண்டிருந்தால் ஆசைக்கும் கோபத்துக்கும் இடமிருக்காது. ஆத்மாவின் உண்மை இயல்பை நினைவில் அவ்வப்போது தருவித்து வைத்துக் கொண்டிருந்தால் வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளும் சக்தி உள்ளத்தில் உண்டாகும். கோபம் அடங்கும். துயரங்கள் குறையும்.

அப்படிச் செய்யாமல் ஆசைகளையும் மோகத்தையும் கோபத்தையும் வளர விட்டுக் கொண்டே போனால், உலக வாழ்க்கையே மிக கஷ்டமாகித் துக்கமும் துயரமும் பெருகி அவற்றைத் தாங்கும் ஆத்ம பலம் குறுகிப்போய் இம்மையிலேயே நரகமனுபவிக்க வேண்டியதாகும். ஆன்ம ஞானம் என்பது துறவிகளுக்கு இன்றியமையாதது. ஆனால் இல்லறம் நடத்தும் சம்சாரிகளுக்கும் அது அவசியம் வேண்டும். அதிகமாகவே வேண்டும்.

# ஆசிரியர்மாருக்கு ஒரு செய்தி

நாடெங்குமுள்ள ஆசிரியர்மார்களுக்குத் தங்கள் நிலையைத் தாங்களே உயர்த்திக் கொள்வதற்கு ஒரு வாய்ப்பு இப்போது கிடைத்திருக்கிறது. புதிய அரசியல் அமைப்பின்படி மேல் மாகாண சட்ட சபைகளில் ஆசிரியர்களுக்கென்று தனி ஸ்தானங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டின் பத்து ஜில்லாக்கள், மலையாள ஜில்லாக்கள் இரண்டு, தென் கன்னடம் ஆகியவை அடங்கிய தென் சென்னைத் தொகுதிக்கு மேல் சட்ட சபையில் நாலு இடங்கள் உண்டு. தென் சென்னை ஆசிரியத் தொகுதியில் உள்ள ஆசிரியர் வோட்டர்கள் 12,000பேர் ஒற்றைமாற்றுவோட்டு முறைப்படி வோட்டு அளித்துமேற்படி நாலு ஸ்தானங்களுக்கும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டும். ஆசிரியர்மார்கள் இதனால் கிடைக்கும் பலன்களைப் பூரணமாய் அடைவது, அவர்கள் இந்தச் சந்தர்ப்பத்தில் சரியான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதைப் பொறுத்திருக்கிறது. அவ்வாறு, சரியான பிரதிநிதி என்று அனைவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய அபேட்சகர் ஒருவர் மேற்படி தொகுதியில் நிற்கிறார். அவர்தான் பேராசிரியர் டி. பி. மீனாக்ஷிசுந்தரனார், எம். ஏ., பி. எல்., எம். ஓ. எல். அவர்கள். சில காலம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பேராசிரியராக இருந்தார். பின்னர், பல தமிழ் மாணவர்களுக்குத் தமிழ்ப் பயிற்சி அளித்து வித்வான் பட்டமும், தமிழ் எம். ஏ. பட்டமும் பெற உதவி புரிந்து வருகிறார். மற்றும் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரனார் தமிழகத்துக்குப் புரிந்து வரும் ஒப்பற்ற தொண்டுகளைப் பற்றி ஆசிரியர்மார்கள் அவ்வப்போது பத்திரிகைகளில் படித்து வந்திருப்பார்கள். அரசியல், சமூகம், கல்வித் துறைகளில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரனார் செய்திருக்கும் தொண்டுகளை விவரிக்க ஒரு புத்தகமே தேவை. ஆசிரியர்கள் இவரைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒரு விசேஷ காரணம் உண்டு. சிந்தாதிரிப்பேட்டை உயர்தரப் பள்ளிகளின் காரியதரிசியாக இருந்து இவர் சிறந்த பணியாற்றி வருகிறார். இந்தப் பள்ளிக்கூடங்களில் ஆசிரியன்மாராயிருப்பவர்கள் அனைவருக்கும் சர்க்கார் பள்ளிக்கூடத் திட்டப்படி அதிகபட்ச சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. ஹெட்மாஸ்டர், ஜில்லா கல்வி அதிகாரி பெறும் சம்பளம் பெறுகிறார். இவ்வாறு செயலில் ஆசிரியர்மாரின் நலத்தையும் அந்தஸ்தையும் பாதுகாத்து வருகிறவருக்குத் தென் சென்னைத் தொகுதி ஆசிரியர்கள் தங்கள் முதல் வோட்டை அளித்துத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ! பேராசிரியர் தெ. பொ. மீனாக்ஷிசுந்தரனார் மேல் சபைக்கு ஆசிரியர் தொகுதியில் தேர்ந்தெடுக்கப் பட்டால் ஆசிரியர் இனத்துக்கே ஒரு பெருந் துணைவராக இருந்து தொண்டு புரிவார் என்பது உறுதி.





# அமரபுரி இளவரசி

**விஜயம்**

## 9. கமலத்தின் ஆகாயப் பிரயாணம்

குடிசைக்குப் போனதும் கிழவி இளவரசர்களுக்குப் பழங்களும் பாலும் கொடுத்து உபசரித்தாள்.

பிறகு சகோதரர்களில் மூத்தவன் "கமலம், எல்லாம் ஒரே அதிசயமா யிருக்கிறதே! நீ இந்தக் காட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தாய்? எங்களை எப்படிக் கண்டு பிடித்தாய்? நாங்கள் அன்னப் பறவைகளாகி விட்டோம் என்று உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான்.

கமலம், தான் அரண்மனையில் சித்தியின் சதிச் செயலை மறைந்திருந்து கண்டு பிடித்தது, பிறகு துணிந்து அண்ணன்மார்களைத் தேடக் காட்டுக்குப் புறப்பட்டது, நெடுந் தூரம் வழி நடந்த அலுப்பினால் வழியில் மயக்க மடைந்து கீழே விழுந்தது, அப்பொழுது இந்தப் பாட்டி உதவி செய்து காப்பாற்றிய விவரங்களை யெல்லாம் சொன்னாள்.

அவளுடைய அண்ணன்மார்கள் இந்த வரலாற்றைக் கேட்டுக் கண்ணீர் பெருக்கினார்கள். கிழவிக்கு மனப் பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொண்டனர்.

அப்பொழுது சகோதரர்களில் கடைசி இளவரசன், "அண்ணா, நம்முடைய துர்ப்பாக்கியமான நிலையைச் சொல்லிவிடவேண்டாமா? பொழுது விடிந்து விட்டால் நம்மால் பேச முடியாதே!" என்றான்.

உடனே கமலம், "அண்ணா, உங்களைப் பற்றிய விவரங்களை யெல்லாம் சொல்லு!" என்று மிகவும் ஆவலும் துக்கமும் கலந்த குரலில் சொன்னாள்.

"ஆமாம், கமலம்! உன்னிடம் அவசியம் சொல்லித்தான் ஆகவேண்டும். நீ எங்களைக் கண்டு பிடிப்பதற்காக எத்தனை கஷ்டப்பட்டிருக்கிறாய்? அப்பப்பா! பசியைப் பொருட்படுத்தாமல் பட்டினி கிடந்து, கொடிய காட்டுப் பாதையில் கடு நடை நடந்து எத்தனை தூரம் வந்திருக்கிறாய்? கேள் கமலம், எங்கள் சோகக் கதையை! சூரிய உதயத்துக்கு ஒரு மணி நேரம் முன்பாக நாங்கள் அன்னப் பறவைகளாகி விடுவோம். சூரிய அஸ்தமனம் வரையில் வான வீதியில் ஓயாமல் பறந்து திரிவோம். சூரிய அஸ்தமனம் ஆனதும் மனித உருவத்தை அடைந்து விடுவோம். இதுதான் மந்திரவாதி எங்களுக்கு இட்ட கட்டளை. அதிலும் பிறந்த ஊருக்கு வரக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லியிருக்கிறான். அப்படித் தப்பித் தவறி வந்து விட்டால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் புறப்பட்டு விடவேண்டும். பல நூறு மைல்களுக்கு அப்பால் கடலில் பிரயாணம் செய்தால் ஒரு செழிப்பான தீவு இருக்கிறது. அது மிகவும் அழகான தீவு. அங்கேதான் நாங்கள் தங்கியிருக்கிறோம். காலையில் எங்கள் உருவம் மாறினதும் நாங்கள் அந்தத் தீவுக்குத்தான் புறப்பட வேண்டும்!" என்றான் மூத்த சகோதரன்.

கமலத்துக்கு இதைக் கேட்க மிகவும் வருத்தமா யிருந்தது. சிறிது நேரம் அவள் மௌனமாக யோசனை செய்தாள்.

"அண்ணா, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீங்களெல்லோரும் இங்கே தங்கியிருக்க முடியாது. எப்படியும் அந்தத் தீவுக்குப் போய்விடவேண்டும். இல்லையா? அப்பொழுது நான் மட்டும் இங்கே தனியாக இருந்து என்ன செய்வது? என்னையும் எப்படியாவது அந்தத் தீவுக்கு அழைத்துப் போய் விடுங்கள். அங்கே போய் இருந்து கொண்டு இந்த மந்திர சக்தியை அகற்றிவிட முயற்சி செய்யலாம்!" என்றாள் கமலம்.

"கடல் கடந்து பல நூறு மைல்கள் செல்லப்போகும் நாங்கள் உன்னை எப்படி அழைத்துச் செல்வது? மேலும் நாங்கள் ஆகாயத்தில் பறந்து போவோம். நீ எப்படி எங்களோடு வர முடியும்? இதற்கு என்ன செய்வது? இன்னொரு முக்கியமான விஷயம். சூரிய உதயத்திலிருந்து அஸ்தமனம் வரையில் கடும் வேகத்துடன் பறந்தால் கூட அந்தத் தீவுக்குப் பாதி தூரம்தான் போக முடியும். நடுக்கடலில் ஒரு சின்னப் பாறை நிற்கிறது. இரவு நேரத்தை அந்தப் பாறையில் கழித்து விட்டுப் பொழுது விடிந்ததும் புறப்பட வேண்டும். என்ன செய்வதென்றே தெரியவில்லையே!" என்றான் சகோதரர்களில் கடைசி இளவரசன்.

மற்ற இளவரசர்களும் ஒருவர் முகத்தை ஒருவர் கவலையோடு பார்த்துக் கொண்டார்கள். அப்பொழுது அங்கே பயங்கர அமைதி நிலவியது. சமுத்திர அலைகளின் 'ஓ' வென்ற சத்தத்தைத் தவிர வேறு சத்தமே கேட்கவில்லை. கமலமும் வெகு நேரம் யோசனையில் ஆழ்ந்தாள்.

அந்தச் சமயம் கிழவி, "இளவரசர்களே, இதற்கு நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். அதன்படி செய்கிறீர்களா?" என்று சந்தோஷத்தோடு கேட்டான்.

இளவரசர்கள், "சொல்லு, பாட்டி! அதன்படி நடக்கிறோம்!" என்று சந்தோஷத்தோடு சொன்னார்கள். கமலத்தின் முகமும் சந்தோஷத்தால் மலர்ந்தது.

"இளவரசர்களே, என்னிடம் மீன் பிடிக்கும் வலை இருக்கிறது. அது மிகவும் உறுதியானது. அதில் கமலம் உட்கார்ந்துகொள்ளட்டும். நீங்கள் பதினொரு பேரும் அந்த வலையைத் தூக்கிக் கொண்டு ஆகாசத்தில் பறந்து போங்கள். வெய்யில் அதிகமாகி உறைக்க ஆரம்பித்ததும் உங்களில் இரண்டு அன்னப் பறவைகள் மட்டும், கமலத்தின் மேல் வெய்யில் பட்டு அவள் வாடி வதங்கிப் போகாமல் இருக்கும் பொருட்டுத் தங்கள் இறகுகளை விரித்து அவளுக்கு மேலே பறந்து கொண்டு வரட்டும். மற்ற அன்னங்களில் ஏதேனும் ஒன்று களைப்படைந்தால் தனியே வரும் அன்னப் பறவைகள் அதற்குப் பதிலாகக் கமலத்தைத் தூக்கிக் கொள்ளலாம். இப்படியே ஒவ்வொன்றும் மாற்றிக் கொள்ளலாம். சமுத்திரத்துக்கு மேலே போகும் பிரயாணமாதலால் சர்வ ஜாக்கிரதையாகப் போக வேண்டும்! என் யோசனை எப்படி?" என்று கேட்டாள் கிழவி.

"பாட்டி, நல்ல யோசனை சொன்னாய். நீ சொன்னபடியே செய்யலாம்!" என்று இளவரசர்கள் உற்சாகத்துடன் சொன்னார்கள்.

கமலத்துக்கும் சந்தோஷம் தாங்கவில்லை.

"பாட்டி, கடவுள்தான் எங்களுடைய ஆபத்தான சமயத்தில் உன்னை அனுப்பி வைத்தார். கொடிய காட்டில் உன்னுடைய உதவி மட்டும் கிடைத்திரா விட்டால் நான் எப்படி என் சகோதரர்களைப் பார்க்க முடியும்? என்னால் நீ இந்தக் கடற்கரைக்கு வந்து குடியிருக்க வேண்டியதாயிற்று. ஆனால் உன்னை மட்டும் தனியே இங்கே விட்டுவிட்டு நான் எப்படிப் போவேன், பாட்டி!" என்று கூறிக் கமலம் கண்ணீர் உகுத்தாள்.

"அதற்கு நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உன் சகோதரர்கள் மந்திரவாதியின் சூழ்ச்சியிலிருந்து தப்பிப் பழைய உருவத்தை அடைந்து விட்டால் நானும் உங்களோடு அரண்மனைக்கு வந்து விடுகிறேன்!" என்றாள் கிழவி.

இரவு வெகு நேரம் ஆகிவிட்டதால் எல்லோரும் படுத்துக் கொண்டனர். இளவரசர்கள் பதினொரு பேரும் குடிசைக்குச் சமீபத்தில் இருந்த பெரிய ஆலமரத்தடியிலே படுத்துக் கொண்டனர். கிழவியும் கமலமும் கூட அங்கேயே படுத்துக் கொண்டனர்.

நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்த கமலம் 'கிஜு கிஜு' என்ற பறவைகளின் சத்தத்தைக் கேட்டு எழுந்திருந்து நாற்புறமும் பார்த்தாள். அவளுடைய பதினொரு சகோதரர்களும் படுத்துக் கொண்டிருந்த இடத்தில் பதினொரு பொன்னிற அன்னப் பறவைகள் 'கிஜு, கிஜு' என்று சத்தமிட்டுக் கொண்டு சுற்றிச் சுற்றி வந்தன. கமலத்துக்கு அதைப் பார்த்ததும் துக்கம் தாங்க முடியவில்லை.

உடனே கமலம் பரபரப்புடன் எழுந்து பல்தேய்த்து முகம் கழுவிக் கொண்டு பாலும் பழமும் சாப்பிட்டாள். அன்னப் பறவைகளுக்கும் வேண்டிய மட்டும் பாலும், பழமும் கொடுத்தாள். கிழவி வலையை எடுத்துத் தயாராக வெளியே விரித்திருந்தாள். கமலம் கண்ணீரும் கம்பலையுமாகக் கிழவியிடம் விடை பெற்றுக் கொண்டு வலையில் வந்து உட்கார்ந்தாள். அன்னப் பறவைகள் அந்த வலையைச் சூழ்ந்து கொண்டு தங்கள் பலமான மூக்குகளினால் வலையை உறுதியாகப் பிடித்துக்கொண்டன. கிழவி அந்த வலையில் வேண்டிய மட்டும் பழங்களைப் போட்டிருந்தாள்.

ஏககாலத்தில் அன்னப் பறவைகள் கமலத்தைத் தூக்கிக் கொண்டு சமுத்திரத்துக்கு மேலே வான வீதியில் 'ஜிவ்' வென்று பறந்து சென்றன. கரையில் இருந்த மரங்களெல்லாம் கொஞ்ச தூரம் வரையில் தெரிந்தன. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து விட்டன. கிழவி அன்னப் பறவைகளும் கமலமும் கண்ணுக்கு மறைகிற வரையில் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நீல வானத்தில் கமலம் வேகமாகப் போய்க் கொண்டிருந்தாள். அவள் மீன் பிடிக்கும் வலையில் உட்கார்ந்து கொண்டிருந்தாளாதலால் அவளால் நாலாபுறமும் நன்றாய்ப் பார்க்க முடிந்தது. ஆனால் கீழே மட்டும் பார்க்க அவளுக்கு ஒரே பயமாயிருந்தது. ஓவென்ற சத்தத்துடன் நீலக்கடல் பயங்கரமாக அலை மோதிக் கொண்டிருந்தது.

அன்னப் பறவைகள் வாயு வேகமாகப் பறந்து சென்றன. கமலத்துக்கு இது முழுவதும் புதிய அநுபவமாயிருந்தது. வர வர வெய்யில் அதிகமாயிற்று. இரண்டு அன்னப் பறவைகள் கூட்டத்திலிருந்து பிரிந்து வந்து கமலத்துக்கு மேலே பறந்து அவள் மேல் வெய்யில் படாமல் பார்த்துக் கொண்டன.

சூரியன் நடு வானத்துக்கு வந்தது; பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அஸ்தமிக்க ஆரம்பித்தது. அன்னங்கள் சோர்ந்து விட்டாலும் விடாமல் பறந்துகொண்டேயிருந்தன.

சூரியன் அஸ்தமனமாகி மறையும் தருணத்தில் அன்னப் பறவைகள் நடுக் கடலில் அலை மோதிக் கொண்டிருந்த ஒரு சின்னப் பாறையில் கமலத்துடன் இறங்கின. அடுத்த நிமிஷம் அவைகள் இளவரசர்களாக மாறின. அங்கே பன்னிரண்டு பேர் தங்குவதற்கு இடம் போதாமல் இருந்தது. நெருங்கி உட்கார்ந்துகொண்டு கமலம் கொண்டு வந்திருந்த பழங்களைச் சாப்பிட்டு விட்டுப் பொழுது விடியும் மட்டும் அந்த நடுக் கடற் பாறையில் தங்கியிருந்தனர்.

கமலத்துக்குச் சமுத்திரத்தின் பேய்க் காற்றிலும் ராக்ஷஸ அலைகளின் சத்தத்திலும் தூக்கமே வரவில்லை. பொழுது விடியும் தருணத்தில் சகோதரர்கள் அன்னப் பறவைகளாகி விட்டனர்.

மீண்டும் அன்னப் பறவைகள் கமலத்தைத் தூக்கிக்கொண்டு தங்கள் ஆகாயப் பிரயாணத்தைத் தொடங்கின. நீல வானத்திலே கமலம் விர்ரென்று போனாள். (தொடரும்)

# அந்தக் காலி இடம்



உங்கள் தோட்டத்திலோ, முற்றத்திலோ, மாடியிலோ இருக்கும் அந்தக் காலி இடத்தை மறந்து விடாதீர்கள். அது உங்களுக்குத் தேவையான காய்கறிகள் எல்லாவற்றையும் கொடுத்து உங்கள் ரேஷன்களின் பற்றாக்குறையைத் தீர்க்கும். நல்ல மண், விதைகள், போதுமான தண்ணீர் இவை இருந்தால் போதும்; உங்கள் கண்ணெதிரிலேயே உங்கள் உணவு உற்பத்தியாவதைப் பார்க்கலாம்.

அருகிலிருக்கும் நர்ஸரி அல்லது உங்கள் ராஜ்ய விவசாய இலாகாவுக்கு எழுதவும். அவர்கள் உங்களுக்கு மகிழ்ச்சியுடன் உதவியளிப்பார்கள்.

## உணவுக் கட்டுப்பாட்டைச் சமாளிக்கும் வழி

AC-288TM



உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...




ஒரு தனவந்தர்கூட, தினமும் ப்ளு ஜில்லெட் பிளேடை உபயோகிக்கும் சாதாரண மனிதனைவிட ஆனந்தமான க்ஷவரத்தை அனுபவிக்க முடியாது. மிகவும் கூராக தீட்டப்பட்ட இதன் விளிம்புகள் வழவழப்பான, சுகபோக க்ஷவரத்தை உங்களுக்கு அளிக்கிறது. மின்சாரத்தால் பதப் படுத்தப்பட்டதும், பிரத்தியேகமாக வளைவாக்கப்பட்டதுமான இந்த எஃகு பிளேடுகளால் அதிக தடவைகள் க்ஷவரம் செய்து கொள்ளலாம். விலை மிகவும் சரசமாயிருப்பதால், ஒவ்வொரு மனிதனும் உலகில் மிகவும் நாகரீகமான மனிதர்களின் விரும்பத்தக்க கூட்டத்தில் சேரலாம்.

# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# சர்மாவின் வைராக்கியம்

**ஸ்ரீரங்கம் நரஸிம்மன்**

கமலா கடிதத்தை எழுதி முடித்தாள். அதே சமயத்தில் உள்ளே நுழைந்தார், அவளுடைய தகப்பனார் சர்மா. தகப்பனாரைக் கண்டதும் சட்டென்று கடிதத்தை மறைத்துக் கொண்டாள், கமலா. ஆனால், அவர் கவனித்து விட்டார். "அது என்ன கமலா?" என்று கேட்டார்.

"கடுதாசி...!" என்று பயந்து கொண்டே இழுத்தாள்.

"யாருக்கு?" என்று சீறினார்.

"அம்மாவுக்கு......!" என்றாள் பேச்சில் உயிரே இல்லாமல். சர்மாவின் கோபம் அளவு கடந்து விட்டது. பல்லைக் கடித்துக் கொண்டு "உனக்கு அவ்வளவு துணிச்சலா? அவ்வளவு சொல்லியும் நீ என் வார்த்தையை அலட்சியம் செய்கிறாயா?" என்று ஆங்காரத்தோடு கத்தினார்.

"அப்பா......!"

"கமலா! நீ வேறு எது வேண்டுமானாலும் கேள். இந்தக் கல்யாணமே பிடிக்காவிட்டாலும் சொல்; நாளைக்கே நிறுத்தி விடுகிறேன். ஆனால்......" என்று சர்மா கூறி முடிப்பதற்குள் நல்ல வேளையாக அங்கே வேதாந்தம் வந்து சேர்ந்தான்.

"அடடே! இது என்ன மாமா?" என்று கேட்டுக் கொண்டே அங்கு பிரஸன்னமானான் வேதாந்தம். நடுங்கிப் போய் நின்று கொண்டிருந்தாள் கமலா. அந்தக் கணத்தில் சர்மாவின் கோபம் சற்றுத் தணிந்தது. சர்மாவைப் பார்த்து "ஏன் மாமா இவ்வளவு கோபம்?" என்றான் வேதாந்தம்.

"அவளையே கேள்!" என்று கூறிவிட்டுக் கூடத்திற்குச் சென்றார் சர்மா.

"விஷயம் என்ன கமலா?" என்றான் வேதாந்தம். கமலா கண்களைத் துடைத்துக் கொண்டே "அம்மாவுக்குக் கடிதம் எழுதினேன். அதற்காகத்தான் இவ்வளவும்......! கல்யாணத்திற்குக் கூட அம்மா வரக் கூடாதாம்!" என்றாள். அதற்குள் அவளுக்குத் துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. புடவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டாள். வேதாந்தம் ஒரு கணம் பேசாமல் நின்று கொண்டிருந்தான். பிறகு "உன் அப்பாவின் பிடிவாத குணம் தெரியுமா...?" என்றான்.

"அத்தான்! உனக்கு அப்பாவின் பிடிவாத குணம்தான் தெரியும்; இப்பொழுது என் பிடிவாதத்தையும் தெரிந்து கொள்!" என்றாள் கமலா. வேதாந்தம் லேசாகச் சிரித்து விட்டு, "உனக்குப் பைத்தியமா கமலா?" என்றான்.

"ஆமாம்! எனக்குப் பைத்தியம்தான். வேண்டுமானால் வேறு நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள்!" என்றாள் கமலா. ஒரு தினுசாகச் சிரித்து விட்டு சர்மாவிடம் போனான் வேதாந்தம்.

கூடத்தில் மாட்டியிருந்த பார்வதியின் போட்டோவின் முன்பு நின்று கொண்டு படத்தையே பார்த்துக் கொண்டிருந்தார், சர்மா. வேதாந்தத்தைப் பார்த்துவிட்டு "ஒன்றும் யோசிக்காதே வேதாந்தம்! அவள் புத்தி இல்லாமல் பேசுகிறாள்!" என்றார். "உங்களுக்குத்தான் ஏன் இவ்வளவு பிடிவாதம்?" என்றான் வேதாந்தம். சர்மாவின் முகம் மீண்டும் கடுமையாக மாறியது. சிறிது நேரம் மௌனமாக நின்று கொண்டிருந்தார். பிறகு ஊஞ்சலில் போய் உட்கார்ந்து கொண்டு "வேதாந்தம்!" என்றார் சர்மா. பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டான் வேதாந்தம். "இவளிடம் எனக்கு ஆசை இல்லையென்று நினைக்கிறாயா?" என்று பார்வதியின் போட்டோவைச் சுட்டிக் காண்பித்தார். "ஈசுவரனுக்குத்தான் வெளிச்சம்!" என்றான் வேதாந்தம்.

"இல்லை, வேதாந்தம்! இவளிடம் என் உயிரையே வைத்திருந்தேன். இப்பொழுது மட்டுமென்ன? என் உள்ளத்தில் அவளுக்கு என்றும் இடமுண்டு! ஆனால்..." மேற் கொண்டு என்ன பேசுவதென்று அவருக்கே புரியாமல் நின்று கொண்டிருந்தார்.

"இல்லத்தில் மட்டும் இடமில்லையாக்கும்!" என்றான் கேலியாக வேதாந்தம். "ஆமாம்!" என்றார் தீர்மானமாகச் சர்மா. அத்துடன் அவர்கள் பேச்சு நின்று விட்டது. ஆனால் இருவருடைய மூளையும் தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்தன.

சர்மாவுக்குக் கிட்டத்தட்ட நாற்பதுவயது இருக்கும். வேதாந்தம், அவருடைய தமக்கையின் பிள்ளை. அவனுடைய இளம் வயதிலேயே பெற்றோர்கள் காலமாகி விட்டார்கள். அது முதல் சர்மாவின் வீட்டில்தான் வசித்து வந்தான். கமலா, சர்மாவின் ஏக புதல்வி. இருவரையும் சரி சமமாகப் போஷித்து வந்தாள், சர்மாவின் மனைவி பார்வதி. மனைவியிடத்தில் அலாதி மதிப்பும், அன்பும் வைத்திருந்தார், சர்மா. ஏனெனில், அவருடைய பேச்சுக்கு மறு பேச்சு சொல்லாமல் நடந்து கொள்ளும் சுபாவமுடையவள் பார்வதி. அப்படிப்பட்ட ஆதர்ச தம்பதிகளின் வாழ்க்கையிலும் பிளவு ஏற்பட்ட தென்றால், அதற்கு விதிதான் காரணம்!

சர்மாவும், பிரணதார்த்தியும் வெகு நாளைய நண்பர்கள். திடீரென்று அவர்களுக்குள் கொஞ்சம் மனஸ்தாபம் ஏற்பட்டது. நாளடைவில் பேச்சு வார்த்தையே நின்று முகாலோபனமும் இல்லாமற் போய்விட்டது.

இப்படி இருக்கையில் பிரணதார்த்தியின் பெண்ணுக்குக் கல்யாணம் நடந்தது. சர்மா

வுக்குப் பத்திரிகை வரவில்லை. ஆனால் பிரணதார்த்தியின் மனைவி, பார்வதியை அழைத்திருந்தாள். இதில் சர்மாவுக்கு அளவு கடந்த வருத்தம். தன்னை மதிக்காதவன் வீட்டுக் கல்யாணத்திற்குத் தமது மனைவி போவதையும் விரும்பவில்லை சர்மா. அதைப் பார்வதியிடமும் கூறியிருந்தார். அவளும் போக வேண்டாமென்று தான் இருந்தாள். ஆனால், விதி அவளை அந்தக் கலியாணத்துக்கு இழுத்துக் கொண்டு போய்விட்டது.

கல்யாண தினத்தன்று காலை பிரணதார்த்தியின் மனைவியும் இன்னும் இரண்டு பெண்களுமாகச் சேர்ந்து வந்து பார்வதியைப் பலவந்தமாக அழைத்துச் சென்று விட்டார்கள். அப்போதிருந்த தாட்சண்ய நிலைமையைப் பார்வதியால் சமாளிப்பதற்கு முடியவில்லை. அவர்களுடன் போய்விட்டாள்!

கல்யாணத்திற்குப் பார்வதி போய்வந்த விஷயம் சர்மாவுக்கு தெரிந்திருக்க வேண்டியதேயில்லை; தெரிந்திருக்கப் போவதுமில்லை. ஆனால், எதையும் மறைத்து வைக்கத் தெரியாத பேதை, அன்று மாலை சர்மா, ஆபீஸிலிருந்து வந்ததும் முதல் காரியமாகத் தான் கல்யாணத்திற்குப் போய்விட்டு வந்ததைக் கூறினாள் பார்வதி. அவ்வளவுதான்! பிரளயகால ருத்ரனாக மாறினார் சர்மா. கண்களில் அனல் பறந்தன. புருவத்தை நெரித்துக் கொண்டு, "அப்புறம் இங்கே ஏன் திரும்பி வந்தாய்? அப்படியே எங்காவது தொலைந்து விடுவதற்கென்ன?" என்று இடி முழக்கம் போல் கத்தினார். உயிரே இல்லாமல் நின்று கொண்டிருந்தாள் பார்வதி. கமலாவும் வேதாந்தமும் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது கமலாவுக்குப் பன்னிரண்டு வயது. வேதாந்தத்திற்குப் பதினாறு. திரும்பவும் சர்மாவின் குரல் எல்லோருடைய வயிற்றையும் கலக்கியது. "ம்! ......ஏன் இன்னும் நிற்கிறாய்? என்னை மதிக்காதவன் வீட்டுக்கு என் வார்த்தையையும் மீறிப் போய்விட்டு வர உனக்கு அவ்வளவு தைரியமா? என் மான அவமானத்தை லட்சியம் செய்யாதவளுக்கு என் வீட்டில் என்ன வேலை? ம்...... போ வெளியே!" என்று தொண்டை கிழியக் கத்தினார் சர்மா. எப்பொழுதுமே பார்வதி பயந்த சுபாவமுடையவள். இப்பொழுதோ, சப்த நாடியும் ஒடுங்கிப் பதுமை போல் நின்று கொண்டிருந்தாள். வாய் ஓயாமல் ஏதேதோ இரைந்து கொண்டிருந்தார் சர்மா. பார்வதி என்னவோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால் சர்மா அவளைப் பேசவிட வில்லை. "டேய் வேதாந்தம்!" என்றார். "ம்..." என்று அவர் முன்னால் வந்து நின்றான் வேதாந்தம். "போய் இவளை ரயிலேற்றி விட்டு வா!" என்றார் கண்டிப்பான குரலில். தயங்கிக் கொண்டே நின்றான் வேதாந்தம். "ஏண்டா மரம் மாதிரி நிக்கறே? முதலில் இந்தச் சனியனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளு!" என்று சொல்லிக் கொண்டே வேதாந்தத்தின் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார்.

பிறகு பார்வதி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் அன்று சர்மாவின் கோபம் தணியவே இல்லை. ஒரே பிடிவாதமாக அவளைப் பிறந்தகத்திற்கு அனுப்பி விட்டுத்தான் மறு காரியம் பார்த்தார். வேதாந்தம்தான் கூடச் சென்று ரயிலேற்றி விட்டு வந்தான்.



**பா**ர்வதியின் தகப்பனார் ஒரு முன்கோபி. விஷயத்தைக் கேட்டதும் புயலாகச் சீறினார். 'அவனை விட்டேனா பார்!' என்று கர்ஜித்தார். பேசாமல் இருக்கும்படி பார்வதி எவ்வளவோ கெஞ்சினாள். ஆனால் அவளுடைய போதாத காலம், அவர் காதில் விழவில்லை. வக்கீல் மூலமாகச் சர்மாவுக்கு நோட்டீஸ் கொடுத்தார். ஏற்கனவே புகைந்துகொண்டிருக்கும் எரிமலையாக இருந்தார் சர்மா. வக்கீல் நோட்டீஸைக் கண்டதும் எரிமலை சீறிக் கொண்டு வெடிக்க ஆரம்பித்து விட்டது. கடைசி வரையில் 'ஒரு கை' பார்த்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டார். அதன்படி செய்யவும் செய்தார். அப்புறம் பார்வதியை அழைத்துக் கொள்ளவே யில்லை. பெண் கமலாவையும் தாயாருடன் அனுப்ப மறுத்து விட்டார்.

வருஷம் ஐந்து பறந்து விட்டது. கமலாவை வேதாந்தத்திற்குக் கொடுப்பதென்பது முன்பே தீர்மானிக்கப்பட்ட விஷயம். இப்பொழுது முகூர்த்தமும் வைத்தாயிற்று! கல்யாண ஏற்பாடுகளெல்லாம் தடபுடலாக நடந்து கொண்டிருந்தன. ஆனால், கல்யாணத்திற்குக்கூடப் பார்வதி வரக்கூடாதென்று ஒரே பிடிவாதமாக யிருந்தார், சர்மா. தாயாரைப் பார்க்காமல் இந்த ஐந்து வருஷமும் இருந்து விட்டாள் கமலா. எவ்வளவு துக்கம் இருந்தாலும் மனத்திற்குள்ளேயே வைத்துக் கொண்டிருந்தாள். ஆனால், கல்யாணத்தின் போதாவது பார்க்கலாமென்ற ஆசையோடுதான் இருந்தாள். இப்பொழுது, "கல்யாணத்திற்கும் அவள் வரக்கூடாது!" என்று அவள் அப்பா கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

இதை அவளால் சகிக்க முடியவில்லை. அழுதாள், கெஞ்சினாள், சண்டையும் போட்டுப் பார்த்து விட்டாள்! தோல்விதான் மிச்சம்!

வேதாந்தம் எப்பொழுதுமே சர்மாவின் கட்சி. சர்மா கீறின கோட்டைத் தாண்ட மாட்டான். அதன் காரணமாகவே அவனிடத்தில் அவருக்கு அவ்வளவு பிரியம்.

கடைசி வரையில் பார்வதிக்குப் பத்திரிகை அனுப்பவேயில்லை. விடிந்தால் முகூர்த்தம்; மாப்பிள்ளை அழைப்பெல்லாம் வெகு விமரிசையாக நடந்து கொண்டிருந்தது. முகத்தில் கலவரம் தோன்ற வேதாந்தத்தினிடம் வந்தார் சர்மா. "ஏன், என்ன விஷயம்?" என்றான் வேதாந்தம். ரகசியமாக "அவள் வந்திருக்காளாம்!" என்றார். வேதாந்தம் ஒன்றும் புரியாமல் "யார்?" என்றான். "பார்வதி!" என்றார் சர்மா. "யார், மாமியா? மாமிக்கு எப்படி விஷயம் தெரியும்?"

"எப்படியோ தெரிந்து வந்திருக்காளே!"

"எங்கே தங்கியிருக்காளாம்?"

"அடுத்த தெருவிலே யார் வீட்டிலோ இறங்கி யிருக்கிறாளாம்!" என்றார் சர்மா. இருவரும் சற்று நேரம் மௌனமா யிருந்தார்கள். பிறகு வேதாந்தம் "மாமா! நான் கமலாவைக் கொஞ்சம் பார்க்கணுமே?" என்றான். "ஏன்?" என்றார் சர்மா. பிறகு "அதற்கென்ன போய்ப் பாரேன். மாடியில்தான் இருக்கிறாள்!" என்றார்.

விடுவிடு என்று மாடிக்குப் போனான் வேதாந்தம். அவனைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்து நின்றாள் கமலா. என்னதான் சகஜமாய்ப் பழகினவர்களாயினும் இப்பொழுது, அவன் மாப்பிள்ளையாயிற்றே!

"கமலா!" என்றான் வேதாந்தம். மெதுவாகத் தலையை நிமிர்ந்து பார்த்தாள் கமலா. "உங்கம்மாவுக்குக் கல்யாணப் பத்திரிகை அனுப்பினாயா?" என்றான்.

"இல்லையே......?"

"பின்னே எப்படி இங்கு வந்தாள்?"

"வந்திருக்காளா?" என்று கேட்டாள் மிகுந்த வியப்புடன் கமலா.

"ஆமாம்! ஒருவேளை அம்மா இங்கு வந்தாலும் வரலாம். வந்தால் நீ கண்டிப்பாய் அம்மாவைப் பார்க்கவே கூடாது! ஒரு வார்த்தை கூடப் பேசக்கூடாது! என்ன?" என்றான் கண்டிப்பான குரலில் வேதாந்தம். பதிலொன்றும் சொல்லாமல் நின்று கொண்டிருந்தாள் கமலா. திரும்பவும் வேதாந்தம், "நான் சொல்வது காதில் விழுந்ததா?" என்றான். "ம்......" என்றாள் ஒரு நினைவாக.

"ஆமாம்: அலட்சியமாய் இருந்துவிடப் போகிறாய்!" என்று மீண்டும் கூறிவிட்டுப் போனான். கமலாவுக்கும் ஏதாவது சுருக்கென்று பதில் சொல்லவேண்டும் போல் இருந்தது. ஆனால், என்ன சொல்லுவதென்று தான் தெரியவில்லை. 'அட, பிராதக நெஞ்சமே!' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள்.

எப்பொழுதும் பக்கத்திலேயே இருக்கும் பக்கத்து வீட்டுப் பாட்டிகூட அப்பொழுது எங்கோ வெளியில் போயிருந்தாள். ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய் உட்கார்ந்து கொண்டிருந்தாள் கமலா. சற்று நேரத்துக்கெல்லாம் அடுத்த வீட்டுப் பாட்டியும் வந்து விட்டாள்.

"பாட்டி!" என்றாள் கமலா.

"என்னம்மா?" என்றாள் பாட்டி.

"அம்மா வந்திருக்காளாமே?" என்றாள் ரகசியமாக.

"ஆமாம், அம்மா."

"நிஜமாகவா?"

"பார்வதியைப் பார்த்து விட்டுத்தான் வருகிறேன் கமலா!" என்றாள் பாட்டி.

"எனக்கு ஒரு உபகாரம் செய்வீர்களா, பாட்டி?" என்றாள் கெஞ்சும் பாவனையில் கமலா. ரொம்பவும் பரிவுடன் "என்னம்மா வேணும்?" என்றாள் பாட்டி. சுற்றிலும் ஒரு முறை பார்த்துவிட்டு, "அம்மாவைப் பார்க்கணுமே?" என்றாள். பாட்டி சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். பிறகு "சரி, ராத்திரி எல்லாரும் தூங்கினப்புறம் போகலாம்..." என்றாள்

"எப்படி?" என்று கேட்டாள் பயந்த வண்ணம் கமலா.

"கொல்லைப் பக்கத்து வழியாய்ப் போய் விட்டு வரலாம்!" என்றாள்.

சுமார் பன்னிரண்டு மணிக்கு எல்லோரும் படுக்கப் போனார்கள். கமலாவும் பாட்டியும் மெதுவாக நடையைக் கட்டினார்கள்.

மறுநாள் காலை ஒரு விக்னமும் இன்றி கமலாவின் கழுத்தில் திருமங்கலியம் ஏறிற்று. சாயந்திரம் ரொம்பவும் சம்பிரமமாக நலங்கு ஆசீர்வாதம் எல்லாம் நடந்தது. கல்யாணம் இவ்வளவு திருப்திகரமாக நடக்குமென்று சர்மாகூட நினைக்கவில்லை. ஒரு வேளை பார்வதி வந்து ஏதாவது இடையூறு உண்டு பண்ணுவாளோ என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தார் சர்மா. கமலா ஒருத்தியைத் தவிர எல்லோரும் சந்தோஷமாகவே காணப் பட்டனர். பாவம்! கடைசி வரையில் அவள் தாயார் வராமலேயே அவள் கல்யாணம் நடந்து விட்டது!

ஊர்வலம் முதலிய சகல வைபவங்களும் முடிந்து எல்லோரும் படுக்கப் போய் விட்டனர். கமலாவைப் பார்க்க மாடிக்கு வந்தான் வேதாந்தம். சர்மாவும் பின்னாலேயே வந்தார். விதியை நினைத்துப் படுத்துக் கொண்டிருந்தாள். கமலா வேதாந்தத்தைக் கண்டதும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து நின்றாள். இடி இடித்தாற் போல் "கமலா!" என்றான் வேதாந்தம். இது நாள் வரையில் இவ்வளவு கடுமையாக அவன் கூப்பிட்டதே கிடையாது. அந்தக் குரல் அங்கிருந்த எல்லோருடைய வயிற்றையுமே ஒரு கலக்கு கலக்கியது. ஏன், சர்மாவே கலங்கி விட்டார்!

ஒன்றும் புரியாத வகையில் எல்லாரும் வேதாந்தத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். புருவத்தை நெரித்துக் கொண்டு "நேற்று உனக்கு என்ன சொன்னேன்?" என்று எரிந்து விழுந்தான். பதிலே சொல்லாமல் நின்று கொண்டிருந்தாள் கமலா. "நான் கேட்பது காதில் விழவில்லை?" என்று மீண்டும் சீறினான், அப்பொழுதும் மௌனம் சாதித்தாள் கமலா. 'பெட்டிப் பாம்பு போல் இருந்த வேதாந்தம் இப்படி மாறுவானென்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. பயம், துக்கம், ஆத்திரம் எல்லாம் அவளைப் பதுமையாக்கி விட்டிருந்தது. "ஏன் கமலா! உன்னைத்தான்!" என்று அவள் முகத்தை நிமிர்த்தி, 'பளீர்' என்று அவளுடைய கன்னத்தில் அறைந்தான்.

கமலாவின் ஆயுளிலேயே இதுதான் அவள் வாங்கிய முதல் அடி! அதுவும் கல்யாணமான முதல்நாளன்று, உயிருக்கு உயிராகப் பழகிய அன்பனிடமிருந்து! "அட பாவி!" என்று தன்னையும் மீறிக் கத்தி விட்டார் சர்மா. சட்டென்று சர்மாவின் பக்கம் திரும்பினான் வேதாந்தம். "மாமா! உங்களுக்கு விஷயம் தெரியாது. நேற்று இவள் என் சொல்லை மீறி விட்டாள். என் வார்த்தையை அலட்சியம் செய்து விட்டாள்! அர்த்த ராத்திரிக்கு மேல் அம்மாவைப் போய்ப் பார்த்து விட்டு வந்திருக்கிறாள். எவ்வளவு நெஞ்சழுத்தம்?..." என்று பல்லைக் கடித்தான் வேதாந்தம்.

கமலாவைப் பார்த்தார் சர்மா. அவள் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது. "உண்டா, இல்லையா?" என்று அதட்டினான் வேதாந்தம். உண்டு என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாள், கமலா. "ஏன் போனாய்?" என்றான் ரௌத்ராகாரமாய். "பெற்ற அம்மாவைப் பார்ப்பது கூடத் தவறு?" என்றாள் அழுகையும் ஆத்திரமும் கலந்தவாறு. "அம்மாவைப் பார்ப்பது தவறில்லை; என் வார்த்தையை மீறினது தான்

தப்பு! அதற்கு என்ன தண்டனை தெரியுமா? இனி உன் ஆயுள் முழுவதும் நீ வாழா வெட்டி!" என்று கர்ஜித்தான் வேதாந்தம். உடல், உள்ளம் எல்லாம் நடுங்க நின்று கொண்டிருந்தார், சர்மா. "போகட்டும் வேதாந்தம். இனிமேல் அப்படி நடக்க மாட்டாள்!" என்றார் சர்மா.

"இனி மேலா? இப்பொழுது நடந்ததற்கு என்ன சொல்கிறீர்கள்?"

"தெரியாத்தனம் தான்!"

"இல்லை; திமிர்! அதன் பலனை அனுபவிக்கத்தான் வேண்டும்!"

"வேதாந்தம்! இந்தச் சின்ன விஷயத்திற்காகவா..."

"சின்ன விஷயமா?" என்றான் வேதாந்தம் கோபத்தோடு.

"ஆமாம்; நீ செய்வது நியாயமில்லை வேதாந்தம்!" என்றார் கெஞ்சும் பாவனையில் சர்மா. கோபத்தோடு சிரித்தான் வேதாந்தம். பிறகு சர்மாவைப் பார்த்து "நீங்கள் செய்தது மட்டும் நியாயம்; அந்த நியாயம் மற்றவனுக்குக் கிடையாதோ? உங்கள் மனைவி, உங்கள் வார்த்தையை மீறினால், அது மன்னிக்க முடியாத குற்றம்; அந்தக் கட்டுப்பாடு உங்க பெண்ணுக்கு மட்டும் கிடையாதோ?" என்று படபட வென்று பேசிக் கொண்டே போனான் வேதாந்தம். ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார் சர்மா. அவருக்கு விஷயம் புரிந்து விட்டது. இப்பொழுது தாம் அனுபவிக்கும் வேதனையைத் தானே அன்று பார்வதியின் தகப்பனாரும் அனுபவித்திருப்பாரென்று ஒரு கணம் நினைத்தார். பார்வதியின் முகம் சட்டென்று அவர் கண் முன் தோன்றியது.

"இவ்வளவுதானே! பார்வதியை நான் அழைத்துக் கொள்கிறேன் வேதாந்தம்!" என்றார். அவ்வளவுதான்! வேதாந்தத்தின் கோபமெல்லாம் எங்கோ பறந்து விட்டது. கமலாவின் முகத்திலும் சட்டென்று ஒரு பிரகாசம் தோன்றியது.

எல்லோரும் கீழே இறங்கிப் போய் விட்டார்கள். கமலாவும், வேதாந்தமும் தனியாக நின்று கொண்டிருந்தனர். "கோபமா கமலா?" என்றான் வேதாந்தம். "எதற்கு?" என்றாள் மெதுவாக. "கன்னத்தில் அடித்ததற்கு?" என்றான் வருத்தத்தோடு. "என்னை அடிக்கவில்லையே!" என்றாள் புன்முறுவலோடு. அவள் கன்னத்தைத் தடவிக் கொடுத்தான் வேதாந்தம்.

கீழே சர்மா, யாரிடமோ பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தார்: "என் பெண்ணைக் கொடுத்து நான் அவனை கிரஹஸ்தனாக்கினேன்; பதிலுக்கு மீண்டும் என்னை அவன் கிரஹஸ்தனாக்கி விட்டான்! பெண் பாசத்தால் என் வைராக்கியம் கடைசியில் சிதைந்து விட்டது! அதில் எனக்குச் சந்தோஷமே."

# படித்துப் பாருங்கள்!

## முதியவன் விருந்து

1951-ம் ஆண்டில் வெளியான தமிழ் நூல்களில் மிக உபயோகமான நூல் எது என்று கேட்டால், 'முதியவன் விருந்து' என்று தயக்கமின்றி விடை கூறலாம்.

குழந்தைகளுக்குப் படிப்பறிவு புகட்டும் முறை வேறு; முதியவர்களுக்குக் கல்விப் பயிற்சி அளிக்கும் முறை வேறு.

"மாட்டுக்கு நாலு கால்" "மனிதனுக்கு இரண்டு கை" "காக்கை கருமை நிறம்" என்பவை போன்ற விஷயங்களைப் பாலர்க்கான பாட புத்தகங்களில் எழுதலாம்.

வயது வந்தவர்களுக்கு இந்த முறையில் படிப்பறிவு அளிக்க முயல்வது அவர்களை அவமதிப்பதாகும். வயது வந்தவர்களுக்கு எழுத்தறிவு இல்லாமற் போனாலும் அவர்கள் அறிவு முதிர்ச்சி பெற்றிருப்பார்கள். அதற்கேற்ப அவர்களுக்கான புத்தகங்களும் அமைய வேண்டும்.

எளிய நடையில் பெரிய விஷயங்களைச் சொல்ல வேண்டும். வாழ்க்கையில் பயன்படக்கூடிய விஷயங்களையும் சொல்ல வேண்டும்.

இதற்கு எடுத்துக் காட்டாக 'முதியவன் விருந்து' என்னும் இந்த நூலைச் சென்னைப் புத்தகாலயச் சங்கத்தார் மிகவும் சிரமம் எடுத்து அருமையான முறையில் வெளியிட்டிருக்கிறார்கள். எவ்வளவு சிரமப் பட்டிருக்கிறார்கள் என்றால், ஏன், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்பித்த திருப்பணியை இப்போது பூர்த்தி செய்திருக்கிறார்கள்! ராஜாஜி அவர்கள் சென்னைப் பிரதம மந்திரியா யிருந்தபோது இத்தகைய நூல் ஒன்றை வெளியிடும்படி சென்னைப் புத்தகாலயச் சங்கத்துக்கு யோசனை கூறினார்கள். அந்த யோசனை இன்று நிறைவேறி யிருக்கிறது. காலதாமதம் அதிகமான போதிலும் காரியம் சிறந்த மாதிரியில் பூர்த்தியாகி யிருக்கிறது.

"பொதுப் பணி" என்பது பற்றி ராஜாஜி முதற் கட்டுரை வரைந்திருக்கிறார். மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், டாக்டர் சுப்பராயன், ஏ. என். சிவராமன், எஸ். ஆர். வெங்கட்ராமன், எம். பக்தவத்ஸலம், ஸி. ஆர். சீனிவாசன், கே. வி. கிருஷ்ணசாமி ஐயர், பெ. நா. அப்புசாமி, டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன், டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் முதலான தமிழ் நாட்டின் சிறந்த அறிஞர்களும் பொதுப் பணியாளர்களும் வயது வந்த முதியவர்களுக்கு உபயோகமான பல விஷயங்களைப்பற்றியும் எளிய நடையில் சிறந்த முறையில் எழுதி உதவி யிருக்கிறார்கள்.

சென்னைப் புத்தகாலய சங்கத்தாரின் அரிய திருப்பணிகள் பலவற்றில் இந்நூலின் வெளியீடு தலைசிறந்த திருப்பணி என்று கூறலாம். சங்கத்தின் தலைவர் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரின் சலியா முயற்சியினாலும் இடைவிடாத ஊக்கத்தினாலுமே இத்தகைய நூல் ஒன்று வெளியாதல் சாத்தியமாயிற்று என்று கூறுவதும் மிகையாகாது.

புத்தகம் கிடைக்குமிடம்: சென்னைப் புத்தகாலயச் சங்கம், 4, சாமிப்பிள்ளைத் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை; விலை: ரூபாய் ஒன்று.

## Service

இப்பொழுது நம் நாடும் சமூகமும் உள்ள நிலைமையில், எது அவசியம், தேவை என்று சிந்தித்துப் பார்த்தால், நல்ல அறிவாளிகளின் உண்மையான சேவைதான் என்று கூறலாம். அதை மனத்திற்கொண்டுதானோ என்னவோ சேவை (சர்வீஸ்) என்ற பெயருடனே இந்த உயர்தரப் பத்திரிகை ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. இந்தப் பத்திரிகை மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வெளி வந்து அறிவு, ஆராய்ச்சித் துறைகளில் சேவை செய்யும். ஒவ்வொரு இதழும் ஒரு விசேஷ மலராக வெளி வரும். முதலில் தீபாவளி இதழ் வெளி வந்தது. இப்பொழுது குடியரசு இதழ் வெளி வந்திருக்கிறது.

பிறக்கும்பொழுதே அறிவு மணம் வீசிக் கொண்டு பிறந்திருக்கும் இப் பத்திரிகையின் குடியரசு இதழில் பல அறிஞர்களின் ஆராய்ச்சிக் கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன. கட்டுரைகள் கருத்துப் பொதிந்தனவா யிருக்கின்றன; சிந்தனைக்கு விருந்தாக அமைந்திருக்கின்றன. அடுத்த இதழ் வருகிற வரையில் விடாமல் வாசித்துப் பயனடையத் தக்க கட்டுரைகள் இந்த இதழில் நிரம்பி யிருக்கின்றன.

காஷ்மீர் பிரதம மந்திரி ஷேக் அப்துல்லா, டி. ஆர். வேங்கடராம சாஸ்திரியார், சுத்தானந்த பாரதி, டாக்டர் டி. எஸ். திரிமூர்த்தி, தஞ்சை சரஸ்வதி மகால் காரியதரிசி ஸ்ரீ எஸ். கோபாலன் முதலிய பிரபல பிரமுகர்கள் இந்த இதழில் விஷயதானம் செய்திருக்கின்றனர்.

சரித்திரம், அரசியல், விஞ்ஞானம், தொழில், கலை, இலக்கியம் இவற்றின் வளர்ச்சிக்குச் சேவை செய்வதையே இப் பத்திரிகை தன் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. இப் பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ கே. எஸ். வேங்கடராமன், புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்தில் பல வருஷங்கள் தங்கியிருந்து பாரமார்த்திகத் துறையில் பக்குவம் பெற்றவர்; நாட்டின் விடுதலை இயக்கத்தில் தீவிர பங்கெடுத்துக் கொண்டு சேவை செய்த பழம் பெரும் தேச பக்தர்; அவர் ஆரம்பித்திருக்கும் இந்த 'சேவை'ப் பத்திரிகை நீடூழி சிறந்து நின்று சேவை புரியும் என்பதில் ஐயமில்லை.

கிடைக்குமிடம் :—Bombay Mutual Annexe No. 9. Linghi Chetty Street, Madras-1., விலை: ரூ. 3—0—0.

## Immediate Knowledge and Happiness

"நான் யார்!" என்னும் ஆத்ம விசாரணையில் இறங்கி இடைவிடாமல் ஆராய்ச்சி செய்து அரும் சாதனையின் மூலம் மகான்கள் அது எங்கும் நிறைந்து எல்லாமாய் நிற்கும் பிரம்மத்தையே குறிக்கிறது என்னும் பேருண்மையைக் கண்டறிந்தனர். கடவுள் ஒருவரே; அவர் எள்ளினுள் எண்ணெய்போல எங்கும் நிறைந்திருக்கிறார் என்னும் அரிய தத்துவமாகிய அத்வைதத்தை அடிப்படையாகக் கொண்டது இந்நூல். 'கடவுளும் நானும்' என்ற பிரிவில் ஆசிரியர் வேதாந்த பரமான பல கேள்விகளைக் கேட்டு அந்தச் சிக்கலான கேள்விகளுக்குத் தெளிவான பதில்களையும் அளித்திருக்கிறார். வேதாந்தமும் கல்வியும், வேதாந்தமும் விஞ்ஞானமும் மதமும், முதலிய பிரிவுகள் ஆராய்ச்சியுடன் விரிவாக விளக்கப் பட்டிருக்கின்றன. கடவுள் தத்துவம் அளவில் அடங்காது, அவனன்றி ஓரணுவும் அசையாது, ஆத்ம சொரூபமாக விளங்கும் ஆண்டவன் சகல ஜீவராசிகளிடத்திலும் விளங்குகிறான், இந்த அரிய பெரிய தத்துவத்தை அறிவதே ஆனந்தம் என்பது இந்நூலில் தெளிவாக விளக்கப் பட்டிருக்கிறது.

ஆசிரியர்: John Levy; கிடைக்குமிடம்: Continental Book Service, 75. Triplicane High Road, Madras-5; விலை: 12sh. 6 d.

# இப்பொழுது எங்கும் கிடைக்கிறது

## உலகப்புகழ் பெற்ற அழகு சாதனம்




## டாகெட் ராம்ஸ்டெல்
உன்னத வானிஷிங் கிரீம்

அழகுக் கலை நிபுணர்களான டாகெட்ராம்ஸ்டெல் உயர் தர மூலப் பொருள்களால் நவீன முறையில் தயாரித்த சிறந்த வானிஷிங் கிரீமை உங்களுக்கு அளிக்கின்றனர்

மாசு மருவற்ற வசீகர மான தோற்றம டைய விரும்பும் பெண்மணிகள் டாகெட்ராம் ஸ்டெல் கிரீமையே நம்பலாம். தினசரி இந்த கிரீமை உபயோகிப்பதனால், குன்றாத இளமை யுடன் கூடிய களங்கமற்ற வசீகரமான தோற் றத்தை யளிக்கும். முகப்பவுடரையும் குறை யும் நீடித்த புதுமையுடன் விளங்கச் செய்யும்.



**இன்றே டாகெட் ராம்ஸ்டெல் அழகுமுறையை ஆரம்பியுங்கள்**




ஹிந்திக் கதை : **மன்மதநாத் குப்தா**

மொழி பெயர்ப்பு : **வாஞ்சி**

**டி**ல்லியிலே அப்துல் குடும்பத்தினர் மூன்று தலைமுறைகளுக்கு மேலாகக் குதிரை வண்டிக் காரர்களாக இருந்து வருகிறார்கள். அப்துல், அவனுடைய தந்தை ஷகூர், ஷகூரின் தந்தை அதாவது அப்துலின் பாட்டன் கரீம் எல்லோரும் குதிரை வண்டி ஓட்டியே ஜீவனம் செய்தவர்கள்.

அப்துல் அவனது ஏழாவது வயதிலேயே குதிரை வண்டி ஓட்ட ஆரம்பித்து விட்டான்! அவன் தந்தை ஷகூர் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கை யாகிவிட்டதால், குடும்பத்தைப் பராமரிக்க வேண்டிய பொறுப்பு குழந்தைப் பருவத்திலேயே அப்துலின் தலையில் விழுந்தது.

அப்துலின் தாய் காலமாகிச் சில வருஷங்கள் சென்றுவிட்டன. அந்தத் துக்கத்தினால் மனம் உடைந்த அப்துலின் தந்தை நோய் வாய்ப்பட்டான். தனக்கு ஏற்பட்ட துக்கத்தை மறப்பதற்காக ஷகூர் குடிக்கவும் ஆரம்பித்தான். இறுதியில் குடியும் நோயும் அவன் உடலை உருக்குலைத்து, அவனை எலும்பு மனிதனாக்கி விட்டன.

எனவே, குடும்ப பாரத்தை அப்துலின் இளம் தோள்கள் சுமக்க நேர்ந்தது. எனினும் அதற்காக அப்துல் சோர்வு அடையவில்லை.

அவன் தன் தந்தையுடன் குதிரை வண்டியில் அடிக்கடி போவது உண்டு. அப்போதெல்லாம் குதிரையின் 'லகானை'த் தான் பிடித்துக் கொண்டு ஓட்ட வேண்டும் என்ற ஆசை அவனுக்கு உண்டாகும். ஷகூர் வண்டியை ஓட்டிச் செல்லும் போது, அவன் அதை இமை கொட்டாமல் ஆச்சரியத்துடன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பான்.

எனவே, ஷகூர் ஒருநாள் அப்துலைக் கூப்பிட்டு, "அப்பா, வியாதி என்னைப் படுக்கையில் வீழ்த்தி விட்டது. மீனுவை இனி நீதான் வண்டியில் பூட்டி ஓட்டிச் செல்ல வேண்டும்" என்றான்.

மீனு என்ற பெயருள்ள ஷகூரின் குதிரையும் ரஸ்டம் என்ற குட்டிக் குதிரையும் சிறிது தூரத்தில் நின்று கொண்டிருந்தன. இனி அந்த இரண்டு குதிரைகளுக்கும் தானே எஜமானன் என்பதை நினைத்தபோது அப்துலுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

ஷகூர் மேலும் சொன்னான்:

"நீ பயப்படவேண்டிய அவசியம் இல்லை. என்னுடைய பதினோராவது வயதிலிருந்து நான் குதிரை வண்டி ஓட்டி வருகிறேன். மீனு நல்ல ஜாதிக் குதிரை. நாமும் பரம்பரையாக இந்தத் தொழிலில் நல்ல பெயர் எடுத்திருக்கிறோம். நீ எதற்காகப் பயப்பட வேண்டும்! அல்லா இருக்கிறார்; காப்பாற்றுவார்!"

அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. அடிக்கடி வரும் இருமல் அவனை மேற்கொண்டு பேச முடியாமற் செய்துவிட்டது.

ஷகூர் பக்கத்தில் இராமல் தான் வண்டி ஓட்டப் போவதை எண்ணியபோது அப்துலுக்கு என்னவோ போல் இருந்தது. இருந்தாலும் அவன் சிறிதும் பயப்படவில்லை. மீனுவை வண்டியில் பூட்டினான். தன் தந்தை சாப்பிட வேண்டிய மருந்தையும் தண்ணீரையும் கயிற்றுக் கட்டிலுக்குக் கீழே வைத்தான். தந்தையின் ஆசியைப் பெறுவதற்காக ஷகூரின் அருகில் போய் நின்றான்.

சென்ற சில தினங்களாக நடக்க முடியாமல் படுத்த படுக்கையாக இருந்த ஷகூருக்கு எங்கிருந்தோ திடீரென்று பலம் வந்து விட்டது. ஒரு தடியை ஊன்றிக் கொண்டு அவன் மீனுவின் அருகில் சென்றான்; அதன் கழுத்தை இரு கைகளாலும் கட்டிக் கொண்டான்.

"மீனு! இன்று முதல் இந்தப் பையன்தான் உன்னுடன் வருவான். அவனைக் கவனித்துக் கொள்வாயா!" என்று அன்புடன் கேட்டான்.

அந்தக் குதிரையும் மேற்படி கேள்வியை அறிந்து "சரி" என்று சொல்வதற்கு அறிகுறியாகத் தன் முகத்தைத் திருப்பி ஷகூரின் கழுத்துடன் உராய்ந்து கொடுத்தது!

அந்த விசித்திர பாஷையை அறிந்த ஷகூர் அதன் முகத்தைத் தடவிக் கொடுத்தான்.

உடனே தன் மகன் பக்கம் திரும்பி, "குழந்தாய்! ஒரு விஷயத்தை நீ மறக்கவே கூடாது. அதாவது எக்காலத்திலும் மீனாவைச் சவுக்கினால் அடித்து விடாதே. சென்ற பதினைந்து வருஷங்களில் நான் ஒரே ஒரு தடவைதான் இதைச் சவுக்கினால் அடித்தேன். அதன் பிறகு, 'இனி சவுக்கையே உபயோகிப்பதில்லை' என்று பிரதிக்ஞை செய்து கொண்டேன். சவுக்கை உபயோகிக்காமலேயே மீனாவும் நானும் சுகமாகக் காலம் தள்ளி வந்திருக்கிறோம்" என்றான். உணர்ச்சிப் பெருக்கால் அவன் நாக்குத் தழு தழுத்தது.

மீனாவை ஒரே ஒரு தடவை தான் சவுக்கினால் அடித்த கதையை ஷகூர் தன் மகனுக்கு நூறு தடவைக்கு மேல் சொல்லியிருக்கிறான்.

அப்போது அப்துலுக்கு மூன்று வயது இருக்கும். அவன் மீனாவின் மீது ஏற முயற்சித்தான். மூன்று வயதுக் குழந்தையால் குதிரை மீது ஏற முடியுமா! முடியாமல் கீழே விழுந்துவிட்டான்.

இதைக் கண்ட ஷகூரின் மனைவி யார்மீது குற்றம் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் மீனாவைக் கண்டபடி தூற்றினாள்.

உடனே ஷகூருக்குக் கோபம் வந்துவிட்டது. மீனா ஏன் வார்த்தையை வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டும்! கோபம் கொண்ட ஷகூர் சவுக்கினால் மீனாவை ஒரு காரணமில்லாமல் வெளுத்து வாங்கி விட்டான். அப்துலும் அந்தச் சம்பவத்தைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தான்.

அன்று முழுதும் மீனா தீனி தின்னவில்லை. அதன் வலது கண்ணில் கண்ணீர் தேங்கி நின்றது. அதைக் கண்ட ஷகூரின் மனம் புழுங்கியது.

"நம் குழந்தையைக் கீழே தள்ளிய இந்தக் கழுதை தீனி தின்னவிட்டால் என்ன!" என்று கருத்து கொண்டாள் ஷகூரின் மனைவி.

அன்றிரவும் மீனா எதுவும் உண்ணவில்லை. அதைக் கண்டதும் ஷகூர் உள்ளூறப் பதை பதைத்துப் போனான். தன் மனைவிக்குத் தெரியாமல் கடைத் தெருவுக்கு ஓடி ஏராளமாக ரொட்டியும் வெண்ணெயும் வாங்கிக் கொண்டு வந்து இரகசியமாக மீனாவுக்கு வைத்தான்.

முதலில் மீனா அவற்றைத் தொடவில்லை! ஆனால் ஷகூர் அதைத் தடவிக் கொடுத்தான். அதன் முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்தான். அதன் முகத்தைத் தன் முகத்துடன் வைத்துக் கொஞ்சி அதைச் சமாதானப்படுத்தினான்.

இவ்விதமெல்லாம் செய்த பிறகுதான் மீனா ரொட்டியை உண்ணத் தொடங்கியது. இந்த விஷயத்தைப் பல மாதங்களுக்குப் பிறகுதான் ஷகூர் தன் மனைவியிடம் பெருமிதத்துடன் சொல்லத் துணிந்தான்.

இதையெல்லாம் அப்துல் நன்கு அறிவானாதலால், தன் தந்தையின் வாக்கை நிறைவேற்றுவதாக உறுதியளித்தான்.

"மீனாவை நான் சவுக்கினால் தொடக்கூட மாட்டேன். மற்றவர்கள் தங்கள் குதிரைகளைச் சவுக்கினால் அடிக்கும்போது என் மீது அடி விழுவது போல் தோன்றுகிறது" என்றான் தந்தையிடம்.

"சில சமயம் உனக்கு அதன் மேல் மிகுந்த கோபம் வரும். அப்படி வந்தாலும்கூட நீ அதை அடக்கிக் கொள்ள வேண்டும். மீனா நல்ல ஜாதிக் குதிரை. எனவே அதன் அருகில் கூடச் சவுக்கைக் கொண்டு போகாதே" என்று ஷகூர் மறுபடியும் வற்புறுத்திக் கூறினான்.

அப்படியே செய்வதாக அப்துல் வாக்களித்து விட்டு, வண்டியில் ஏறிக் கொண்டான். வண்டி கண்ணுக்கு எட்டிய தூரம் போகும் வரையில் பார்த்துக் கொண்டிருந்த ஷகூர் மெதுவாகத் திரும்பி வந்து கட்டிலில் அமர்ந்தான். அவன் கட்டிலிலிருந்து எழுந்து போனபோது இருந்த வேகம் திரும்பி வந்தபோது இல்லை. அவன் தள்ளாடிக் கொண்டே திரும்பி வந்தான்.

படுத்த படுக்கையாக இருந்த ஷகூர் ஒரு வருஷம் கழித்து இறந்தான். நடுவில் அவன் உடம்பு சிறிது குணமடைந்தது. அப்போதெல்லாம் அவன் தன் மகனுக்கு உதவியாக வீட்டு வேலைகளைக் கவனித்து வந்தான்.

பூரண குணமடைந்தால் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்ற ஆசை கூட ஷகூரின் மனத்தில் எழுந்தது. அப்துல் நாள் முழுதும் வண்டியோட்டி விட்டு வீட்டுக்கு வந்தபின் வீட்டு வேலைகளையும் கவனிக்கும்படி நேருவது ஷகூருக்குக் கஷ்டமாக இருந்தது. வீட்டில் ஒரு பெண் இருந்தால், எல்லா வேலைகளையும் கவனித்துக் கொள்வாள் அல்லவா! நாள் முழுதும் வண்டியோட்டும் அப்துல் வீட்டிலாவது கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டாமா!

அதே சமயம் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டால் அப்துலுக்கும் தனக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு விடுமோ என்ற வேதனையும் கவலையும் ஷகூருக்கு உண்டாயின.



இவ்விஷயமாக ஷகூர் ஒரு திட்டமான முடிவுக்கு வரு முன்பே, அவன் மறுபடியும் படுத்த படுக்கையாகக் கிடக்கும்படி நேர்ந்து விட்டது. இந்தத் தடவை அவன் தேறவே யில்லை.

ஒரு நாள் ஷகூர் அப்துலைக் கூப்பிட்டான். "மீனாவையும் ரஸ்டமையும் இங்கு அழைத்து வா" என்றான்.

அப்போது ரஸ்டம் யௌவனப் பருவத்தை அடைந்து வண்டியில் பூட்டப் படுவதற்குத் தயாராக இருந்தது.

அப்துல் தன் அருகில் ஓட்டிக் கொண்டு வந்த அந்த இரு குதிரைகளையும் ஷகூர் தடவிக் கொடுத்தான். "இந்த இரண்டையும் மிகவும் ஜாக்கிரதை

யாகக் கவனித்துக் கொள். இது தான் நம் குடும்பத்தின் பொக்கிஷம்'' என்று சொல்லிக் கொண்டே அவன் தன் கண்களை மூடினான்.

ஷகூரின் நிலையை அறிந்து கொண்டது போல மீனா கண்ணீருடன் சடலத்தை அடிக்கடி முகர்ந்து பார்த்தது. ரஸ்டம் தன் கால்களால் தரையைத் தேய்த்துத் தன் துக்கத்தை வெளிப் படுத்தியது.

ஷகூரின் சடலத்தை அடக்கம் செய்த பின் அப்துல் வந்து பார்த்த போது, மீனாவின் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

மிருக வைத்தியத்தில் தேர்ச்சி பெற்ற டாக்டரைக் கொண்டு வந்து காட்டியபோது, மீனா பிழைக்காது என்று சொல்லி விட்டார்.



தந்தை மாண்ட போது கண்ணீர் விட்டுக் கதறியதைப் போலவே மீனா இறந்த போதும் அப்துல் கண்ணீர் விட்டுக் கதறினான். தந்தையைப் பிரிந்த ஏக்கத்தினாலேயே மீனா மாண்டது என்பதை நினைத்தபோது அப்துலின் துக்கம் பன் மடங்கு அதிகமாயிற்று.

பின்னர் பல நாட்கள் வரையில் அப்துல் வண்டியோட்டுவதையே மறந்து சோகத்தினால் வீட்டிலேயே இருந்தான். வண்டி புழுதி படிந்து கிடந்தது. ஓடி விளையாடிக் கொண்டிருந்த ரஸ்டமும் அப்துலைப் போலவே இருந்த இடம் தெரியாமல் மௌனமாக இருந்தது.

எனினும் எவ்வளவு காலம் வேலையின்றி அப்படியே இருக்க முடியும்!

அப்துலிடம் இருந்த பணமெல்லாம் கரைந்து விட்டது. ஒரு நாள் அப்துல் ரஸ்டமுக்கு அருகில் வந்து அதைத் தட்டிக் கொடுத்தான். அப்போது தான் ரஸ்டம், தான் ஏதோ புதிய சக்தி பெற்றது போல் உடம்பை ஓர் உலுக்கு உலுக்கிக் கொண்டது. அப்துலின் தலையை முகர்ந்து பார்த்தது.

"அப்பா, ரஸ்டம்! நாம் ஏழைகள் அல்லவா! எத்தனை நாட்கள் இப்படி வேலையில்லாமல் வீட்டில் உட்கார்ந்திருக்க முடியும்! உன் தொழிலை நீயும் என் தொழிலை நானும் செய்தால்தானே சாப்பிடலாம்!'' என்றான்.

அப்துலின் அபிப்பிராயத்தை ஆதரிப்பது போல் ரஸ்டம் ஒரு கனைப்புக் கனைத்தது!

அன்றிலிருந்து அப்துல் ரஸ்டமை வண்டியில் பூட்டிக் கொண்டு செல்லத் தொடங்கினான்.

அப்துலுக்கு அதிக வருமானம் கிடைத்தால் அது ரஸ்டமுக்குத் தெரியும்! அன்று அப்துல் ரஸ்டமுக்காக உயர்ந்த ரொட்டியும் வெண்ணெயும் வாங்கிக் கொண்டு வருவான். வாயில் பீடியை வைத்துக் கொண்டு ஏதாவதொரு சினிமாப் பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருப்பான். தான் அதை அறிந்து கொண்டதற் கறிகுறியாக ரஸ்டம் சில நிமிஷங்களுக்கு ஒரு தடவை கனைத்துக் கொள்ளும்!

"என்னடா! என்னைப் போல் இன்று நீயும் குஷியாக இருக்கிறாயே!'' என்று முதுகில் தட்டிக் கொடுப்பான் அப்துல்.

இப்படியே அப்துலின் வாழ்க்கையும் ரஸ்டமின் வாழ்க்கையும் சுகமாகக் கழிந்து கொண்டிருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் இரண்டாவது உலக மகாயுத்தம் மூண்டது. மேற்படி யுத்தம் நிரபராதிகளான அப்துல், ரஸ்டம் இருவரையுமே பாதிக்க ஆரம்பித்தது.

யுத்தம் மூண்ட சிறிது காலத்துக்குப்பின் கொள்ளின் விலை மிகவும் அதிகமாகி விட்டது. எனவே முன் போல் ரஸ்டமுக்கு அதிகக் கொள்ளு வாங்கி வைக்க அப்துலால் முடியவில்லை.

"ஏய், ரஸ்டம்! இந்தப் பாழும் பிரிட்டிஷாரும் ஜெர்மானியரும் உன் கொள்ளில் மண்ணைப் போட்டு விட்டார்களே!'' என்றான் அப்துல்.

* * *

அப்துலுக்குப் பதினெட்டு வயதாயிற்று. அவனிடம் குடி போன்ற கெட்ட வழக்கம் எதுவும் இல்லாததால், அவனால் பணம் சேமித்து வைக்க முடிந்தது. அவன் ரஸ்டமையும் தன்னைப் போலவே நினைத்துப் பராமரித்து வந்ததால், அது மிகவும் புஷ்டியாகவும் காத்திரமாகவும் இருந்தது. எனவே யாரும் அந்தக் குதிரை பூட்டிய வண்டியையே நாடினார்கள். தவிர, அப்துல் மெத்தை, கண்ணாடி முதலியவற்றினால் தன் வண்டியை அழகாகவும் வசதிகளுடனும் வைத்திருந்தான்.

அதைக் கண்டு அவனது சகாக்கள் ஏளனம் செய்தனர். அப்துலின் மீது அவர்களுக்கு உள்ள பொறாமையே அதற்குக் காரணம். எனினும் அதையெல்லாம் அப்துல் லட்சியம் செய்யவில்லை.

குதிரை வண்டிக்காரர்களுக்குள் அப்துல் சிறந்து விளங்கியதால், அவனுக்குப் பெண் கொடுக்கப் பலர் போட்டி போட்டுக் கொண்டு முன் வந்தனர். எனினும் தான் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறி அப்துல் கண்டிப்பாக மறுத்து விட்டான்.

இந்தப் பிடிவாதம் அதிக காலம் நீடிக்காது என்பது அவர்களுக்குத் தெரியும். எனவே, அப்துல் தங்கள் வலையில் விழுவதற்கு எப்போது சந்தர்ப்பம் கிடைக்கும் என்று அவர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்கள் எதிர்பார்த்தது போல, அந்தச் சந்தர்ப்பம் வெகு சீக்கிரத்திலேயே ஏற்பட்டது!

அப்துல் ஒழுக்கத்துடனும் ஆரோக்கியத்துடனும் இருந்ததால், அவன் நோய் வாய்ப் பட்டதே இல்லை. எனினும் ஒரு சமயம் அந்த நகர் முழுதும் ஏற்பட்ட கொள்ளை நோய் அப்துலையும் பற்றிக் கொண்டது. அந்த நோயினால் மேற்படி நகரில் பலர் மாண்டனர். நல்ல வேளையாக அப்துல் நாலு நாட்களே ஜுரமாகக் கிடந்தான். பிறகு குணமடைந்து எழுந்து விட்டான்.



பிரயாணி :- ஐயையோ ! ஒன்றரை மணி ரயில் போய் விட்டதே ! என்ன பண்ணுவேன் !

போர்ட்டர் :— கவலைப்படாதீங்க ! இன்னிக்குப் பன்னிரண்டு மணி வண்டி லேட்டுங்க. இனிமேல்தான் வரப் போகிறது. அதிலே போங்க !

ஆனால் அந்த நாலு நாளும் ரஸ்டமைத் தான் கவனிக்க முடியாமற் போயிற்றே என்று அப்துல் மிகவும் வருந்தினான். அப்துலின் நண்பன் ஒருவன் ரஸ்டமுக்குத் தீனி வைத்துக் கவனித்துக் கொண்டான் என்றாலும், அப்துலைப் போல் அவனால் கவனிக்க முடியுமா ! ஜுரம் நின்று அப்துல் ரஸ்டமை வந்து பார்த்த போது அதன் முகமும் உடலும் மிகவும் வாடி யிருந்தன.

சில நாட்கள் கழித்த பிறகுதான், ரஸ்டம் வாட்டமுற்றிருந்ததற்கு உண்மையான காரணம் என்ன என்பது தெரிந்தது.

அப்துல் ஜுரத்தினால் படுத்த படுக்கையாக இருந்த போது, அவனுடைய நண்பன் ஹுசேன் ரஸ்டமைத் தன் வண்டியில் பூட்டி ஓட்டிச் சென்றதாயும், அப்போது ரஸ்டம் தகராறு செய்யவே அதைச் சவுக்கினால் கடுமையாக அடித்துவிட்டதாயும் தெரிந்தது.

அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட உடனே அப்துல் ஹுசேனின் வீட்டுக்கு ஓடினான். அப்போது இருவருக்கும் ஏற்பட்ட வாய்ச் சண்டை முற்றிக் கைகலப்பில் வந்து முடிந்தது. நல்ல வேளையாக அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் வந்து தடுத்தனர். இரா விட்டால் பெரும் விபரீதம் நேர்ந்திருக்கும்.

அப்துல் வீட்டுக்கு வந்தான். ரஸ்டமுக்குச் சந்தோஷம் ஏற்படும்படி செய்வதற்காக விலை உயர்ந்த ரொட்டியும் வெண்ணெயும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான்.

அதுதான் சமயம் என்று பலரும் அப்துலைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினர். கல்யாணம் செய்து கொண்டிருந்தால் ரஸ்டமை அப்துலின் மனைவி கவனித்திருப்பாள் அல்லவா ! வேறொருவன் ஓட்டிச் சென்று அடித்திருக்க மாட்டான் அல்லவா !

ரஸ்டமின் சௌகரியத்துக்காக அப்துல் எதுவும் செய்யத் தயாராக இருந்தான். கல்யாணம் செய்து கொள்ளும் விஷயமாக அவன் கொண்டிருந்த பிடிவாதம் மறைந்ததற்கு அதுதான் காரணம்.

அப்துலுக்குக் கல்யாணம் நடந்தது. கல்யாணம் நடந்ததிலிருந்து அவனுக்குப் பாதி வேலை குறைந்தது. அவன் மனைவி பதீமா வீட்டு வேலைகளையெல்லாம் கவனித்துக் கொண்டது அவனுக்கு மிகவும் உதவியாக இருந்தது. ஆனால் ரஸ்டமுக்குத் தீனி வைக்கும் பொறுப்பை மாத்திரம் அவன் அவளிடம் ஒப்புவிக்க இசையவில்லை.

* * *

இரண்டாவது மகாயுத்தம் முடிந்தது. அப்போது கூடக் கொள்ளின் விலை குறையவில்லை.

பிறகு இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைக்கப் போவதாக அப்துல் கேள்விப்பட்டான். அச் செய்தி அவனுக்கு நம்பிக்கையைக் கொடுத்தது.

“ ரஸ்டம் நமக்குச் சுதந்திரம் கிடைக்கட்டும் ; உனக்கு மூன்றுவேளையும் முதல்தரமான கொள்ளு வைக்கிறேன் ” என்று உற்சாகத்துடன் ரஸ்டமுக்கு ‘ஷொட்டு’க் கொடுத்தான் அப்துல்.

செங்கோட்டையில் நடந்த சுதந்திர விழாக் கூட்டத்தில் அப்துலும் கலந்து கொண்டான்.

பிறகு பாஞ்சாலத்தில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரை யொருவர் சுட்டுக் கொண்டும் வெட்டிக் கொண்டும் சாவதாக அப்துல் கேள்விப்பட்டபோது, அவர்கள் எல்லோருக்கும் பைத்தியம் பிடித்திருக்க வேண்டுமென நினைத்தான்.

நாளுக்கு நாள் கலகங்களைப் பற்றிய அதிகச் செய்திகள் வரத் தொடங்கின. டில்லியில் உள்ள குதிரை வண்டிக்காரர்கள் கூட அதற்கு முன் ஒரு காலத்திலும் இராதவாறு ஹிந்துக்கள் என்றும் முஸ்லிம்கள் என்றும் பிரிந்து நிற்கலாயினர்.

ஒருநாள் அப்துலின் மாமனார் அவன் வீட்டுக்கு வந்தார். ‘எல்லாரும் பாகிஸ்தான் போகாவிட்டால் பேராபத்து நேரும் என்று சொன்னார். இறந்து போவதாயினும் தான் டில்லியை விட்டு நகரப் போவதில்லை என்று அப்துல் சொல்லிவிட்டான்.

ஒருநாள் அப்துல் குதிரை வண்டியை ஓட்டிக் கொண்டு இரவில் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது, பதீமாவைக் காணவில்லை. அவள் அவளுடைய தந்தையுடனும் மற்ற உறவினர்களுடனும் பாகிஸ்தானுக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டதாக அண்டை வீட்டுக்காரர்கள் கூறினர்.

அச் செய்தி அப்துலுக்கு இடி விழுந்தது போலிருந்தது. அவன் மறுநாள் வண்டியை ஓட்டிக் கொண்டு வெளியே செல்லவில்லை. டில்லியிலும் பல இடங்களில் கலகங்கள் ஏற்பட்டிருப்பதாயும், வெளியே தலை காட்ட வேண்டாம் என்றும் அவனது நண்பர்கள் கூறினர்.

இனி அமைதியாக வாழ்க்கையை நடத்த முடியாது என்று அப்துலுக்குத் தோன்றியது. அவன் மருந்துக் கடைக்குச் சென்று ஏதோ வாங்கி வந்தான். அதைப் பொடி செய்து ரொட்டியுடன் ரஸ்டமுக்குக் கொடுத்து விட்டான்.

ஒரு மணி நேரம் கழித்து அப்துல் கண்ணீர் ததும்ப ரஸ்டமைப் பார்ப்பதற்காகச் சென்ற போது, அது கால்களைப் பரப்பிக் கொண்டு கீழே விழுந்து கிடந்தது

ரஸ்டமை இழந்துவிட்டு இந்த உலகில் வாழ அப்துலுக்குச் சிறிதும் இஷ்டமில்லை. எனவே அப்துல் மறுபடியும் மருந்துக் கடைக்குச் சென்றான். அங்கு வெகு நேரம் தயங்கி நின்றான். பிறகு வெறி பிடித்தவன் போல் அங்கிருந்து கால் போன போக்கில் ஓடினான் ; ஓடிக்கொண்டே யிருந்தான்.


முயல் இனி தூங்க முடியாது...


...ஏனெனில், ஆமைகள் கூட ஜெயித்து விடுகின்றன.


எம்.எல்.ஏ.க்கள் இனி மண்டைக் கர்வம் பிடித்துத் திரிய முடியாது


ஏனெனில், அந்த கர்வம் ஒரு நாள் வெடித்துவிடும்.


அபேட்சகரைக் கண்ட கண்ட தொகுதியில் கொண்டு போய் நிறுத்த முடியாது..
எனக்கே வோட்டுப் போடுங்கள்!


..காரணம் வோட்டருக்கு வழி காண்பிக்கத் தெரிந்து விட்டது!
போ வெளியே!

ரொம்பவும் தன்னம்பிக்கை கொண்டு அலைய முடியாது.. ..அங்கங்கே கிடு கிடு பள்ளங்கள் இருக்கின்றன.

தேர்தலின் போது மட்டும் வோட்டரிடம் போவதில் பிரயோசனமில்லை... ..எப்பொழுதுமே அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும்!

கடைசியாக வோட்டரும் ஒருதடவைக்கு இருதடவை யோசித்து வோட்டுப் போட வேண்டும்...



இப்பொழுது ஏற்பட்டிருப்பது போன்ற குழப்பம், இனி ஏற்படாமலிருக்க!






## 13. வேதாவின் தந்தை

டாக்டரின் அந்தத் தீவிரமான வார்த்தைகளைக் கேட்டதும் வேதாவுக்கு இன்னும் பயம் அதிகரித்தது. இருந்தாலும் அதை அதிகமாக வெளிக் காட்டிக் கொள்ளாமல், கெஞ்சும் குரலில், "இப்பொழுது ஒன்றும் வேண்டாம். நாளைய தினம் அவளைச் சந்தித்து நீங்கள் ஏதாவது சொன்னால், இன்று இரவு நாம் ரகசியமாகச் சந்தித்ததை அவள் தெரிந்து கொள்ளும்படி நேரும். அது எவ்வளவு அபாயமானது என்று உங்களுக்குத் தெரியவில்லையா! தயவு செய்து என்னுடைய வார்த்தையை நீங்கள் தட்டாதீர்கள்" என்றாள்.

டாக்டர் மௌனமாக உட்கார்ந்திருந்தார். வேதாவின் வார்த்தைகளில் உண்மை இருந்ததை அவர் சிறிது சிந்தித்துப் பார்த்த பிறகே உணர்ந்தார். ராஜாளி மடத்திற்குச் சென்று மரகதத்துடன் அவர் போராடத் தொடங்கினால் அன்று இரவு வேதாவுடன் அவர் தனிமையில் சந்தித்த ரகசியம் வெளியாகிவிடும். எத்தகைய ஆழ்ந்த காதலிருந்தும் ஒரு வீட்டிலிருந்த பெண்ணைத் தந்திரமாக இரவு வேளையில் கடத்திக்கொண்டு போய்ச் சந்திப்பது என்பதைப் பொறுப்பும் கௌரவமும் வாய்ந்த ஒரு மனிதன் செய்யக் கூடிய காரியமாக உலகம் கருதாது. தவிர, வேதா செய்த இந்தக் காரியம் தவறாகக் கருதப்படும். அதற்காக அவளுக்கு மரகதம் அளிக்கக் கூடிய தண்டனை மிக மிகக் கொடியதாய் இருக்கலாம். இதன் காரணமாக மரகதம் வேதாவை ராஜாளி மடத்திலிருந்து அப்புறப்படுத்தி வேறு எங்கேனும் ரகசியமான இடத்தில் சிறை வைத்தாலும் வைக்கக் கூடும்.

இதை யெல்லாம் நினைத்தபொழுது டாக்டர் பரசுராமனுக்குத் திகில் ஏற்பட்டது. அந்தச் சூழ்நிலையில் எச்சரிக்கையாகவும் பகுத்தறிவோடும் அமைதியாகவும் எதையும் செய்வதுதான் அவருக்கு உசிதமாகப் பட்டது.

"சரி, வேதா! நீ சொல்கிறபடியே நான் கேட்கிறேன். ஆனால் இது மாத்திரம் நிச்சயம். நான் சொர்க்கத்திற்குப் போவதாயிருந்தாலும் சரி, நரகத்திற்குப் போவதாயிருந்தாலும் சரி, உன்னை அந்தப் பேயின் கைகளிலிருந்து விடுவிக்காமல் இருக்க மாட்டேன். வேதா, நீ என்னைக் காதலிக்கிறாயல்லவா! எனக்கு மனைவியாக உனக்கு விருப்பம்தானே!" என்று கேட்டார்.

வேதா மௌனமாக இருந்தாள். அவள் முகத்தில் படர்ந்திருந்த அச்சமும் குழப்பமும் இன்னும் தெளிவடையவில்லை.

"உனக்குச் சம்மதமில்லையா......!" என்றார் டாக்டர் பதட்டத்துடன். அப்பொழுது அவருடைய குரலில் ஆத்திரமும் வேதனையும் கலந்திருந்தன.

"எனக்கும் அதில் ஆசைதான்" என்றாள் வேதா. அதைச் சொல்லும்பொழுது பயமும் வாட்டமும் நிறைந்திருந்த அவளது முகத்தில் கூட ஒரு புன்முறுவல் கழியிட்டுக் கொண்டு ஓடியது.

டாக்டர் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "வேதா! உன் பயமும் குழப்பமும் என் நம்பிக்கையைக் குலைத்து விடும்போல் இருந்தது. ஆனால் உன் மனத்தை அன்று இரவு ராஜாளி மடத்தில் உன்னைச் சந்தித்த பொழுதே நான் சரியாக உணர்ந்து கொண்டு விட்டேன். இப்பொழுதுதான் என் மனது நிம்மதி யடைந்தது" என்றார். அவர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே வீட்டிற்குள்ளிருந்து "வேதா!" என்று பொன்னி கூப்பிடும் குரல் அவர்கள் காதில் விழுந்தது.

அதைக் கேட்டதும் வேதா அவசரமாக எழுந்து, "இதோ வந்து விட்டேன், பொன்னி!" என்று பதில் குரல் கொடுத்தாள்.

அப்பொழுது இரவு மணி மூன்றிற்கு மேலிருக்கும். பொழுது விடிவதற்குள் ராஜாளி மடத்திற்கு அவர்கள் போய்விட வேண்டும். ஆனால் அந்தக் காதலர்கள் இருவருக்கும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிவதற்கே மனம் இல்லை. இருந்தாலும் எவ்வளவு நாழிகைதான் அப்படி இருக்க முடியும்! ஆகவே, வேதா டாக்டரிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

டாக்டர் அவர்களை வழியனுப்புவதற்காக வீட்டு வாசல் வரையில் வந்தார். மருதப்பன் வாசலில் வண்டியுடன் தயாராய் நின்று கொண்டிருந்தான். பொன்னியும் வேதாவும் வண்டியில் ஏறி உட்கார்ந்தனர். மருதப்பன் மாட்டை

அதட்டி வண்டியை ஜரூராக ஓட்டத் தொடங்கி னான். வண்டி கண்ணுக் கெட்டிய தூரத்திற்கு மேல் சென்று மறையும் வரையில் டாக்டர் அந்தத் திசையையே நோக்கிக் கொண்டிருந்துவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

வண்டி அதிவேகமாகச் சென்று கொண்டிருந் தது. வேதா ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் தன்னையே மறந்து விட்டவள்போல் உட்கார்ந்திருந்தாள். அவ்வளவு நேரமும் மௌனமாக இருந்த பொன்னி, "டாக்டர் என்ன சொன்னார், வேதா!" என்று கேட்டாள். வேதா பொன்னியின் முகத்தைப் பார்த்துவிட்டு எவ்விதமான பதிலும் சொல்லா மல் தலையைக் குனிந்து கொண்டாள்.

"என்னிடம் சொல்லக்கூட வெட்கமா!...... ஓஹோ! 'எங்கள் அத்தான் வண்டியில் இருக்கி றாரே' என்று வெட்கப்படுகிறாயா......! அதுவும் சரிதான். ஆனால் எல்லாம் எனக்குத் தெரியும். எப்படியோ நீங்கள் இரண்டு பேரும் கல்யாணம் செய்து கொண்டு சுகமாக வாழ்ந்தால் எனக்குச் சந்தோஷம்தான்" என்றாள் பொன்னி.

வேதா தழுதழுத்த குரலில் அடக்கமாகச் சொன்னாள்: "பொன்னி! இன்று இரவு நடந்த தெல்லாம் எனக்குக் கனவுபோல் இருக்கிறது. நீ தெய்வம் போல் வந்து இந்தக் காரியத்தை யெல்லாம் செய்திருக்கிறாய். உனக்கு நான் என்ன உபகாரம் செய்யப் போகிறேன்! இதை யெல்லாம் பற்றிச் சிந்திக்கக்கூட எனக்குச் சக்தி இல்லை."

"இதையெல்லாம் பற்றி ராஜாளி மடத்தில் போய்ச் சிந்திக்க எவ்வளவோ நேர மிருக்கிறது. நீ எதைப்பற்றிச் சிந்திக்கப் போகிறாய்! எப்பொழு தும் டாக்டர் நினைவுதான் உன் மனதிலிருக்கப் போகிறது!" என்று சொல்லிவிட்டு விஷமமாகச் சிரித்தாள் பொன்னி.

வேதா இதற்கு எவ்விதமான பதிலும் சொல்ல வில்லை. அவளுடைய முகத்தில் வெட்கக் குறி தோன்றியது. அவள் வேறு எங்கோ தன் பார்வை யைச் செலுத்தினாள். வண்டி அதி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. மருதப்பன் வண்டிக் குள் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கவனித் தானோ, என்னவோ! அவனுடைய கவனமெல் லாம் மாட்டை அதிவேகமாக அதட்டி விரட்டு வதிலேயே இருந்தது.

வண்டி ராஜாளி மடத்திற்கு அருகிலுள்ள தோப்பை அடைந்தது. மருதப்பன் வண்டியை நிறுத்திவிட்டு, "ஹும்! எசமானியம்மா வெல் லாம் வண்டியை விட்டுக் கீழே இறங்கலாம்" என்றான். பொன்னியும் வேதாவும் வண்டியை விட்டு இறங்கினார்கள்.

"என்ன அத்தான், போய் வரட்டுமா!" என்று கேட்டாள் பொன்னி.

"சரி, நாளைக்கும் வண்டி கொண்டு வரட்டுமா!" என்று கேட்டான் மருதப்பன்.

பொன்னி சிரித்துக் கொண்டே, "வேண்டாம். வேண்டும் போது சொல்லுகிறேன்" என்றாள்.

மருதப்பன் சிரித்துக் கொண்டே, "சரிதான், எசமானியம்மா! நாளைக்கு ராத்திரி நான் வந்து உங்களைப் பார்க்கட்டுமா!" என்று கேட்டான்.

"வாருங்களேன்! வேண்டாம் என்று யார் தடுக்கிறார்கள்! ஆனால் ஜாக்கிரதை!" என்று எச்சரித்தாள் பொன்னி.

"அதெல்லாம் எனக்குத் தெரியாதா! ... சரி! நாழிகையாகிவிட்டது. இன்னும் கொஞ்ச நேரம் போனால் பொழுது விடிந்துவிடும். அந்தப் பிசா சுகள் எல்லாம் எழுந்திருப்பதற்கு முன்னால் நீங்கள் போய் விடுங்கள்" என்றான் மருதப்பன்.

பொன்னியும் வேதாவும் ராஜாளி மடத்தை நோக்கி அதிவேகமாக நடந்தனர். ராஜாளி மடத் தின் பின்புற வாசலை அடைந்த பொழுது, போகும் போது கதவின் தாழ்ப்பாளில் மாட்டி விட்டுச் சென்ற பூட்டு அப்படியே இருந்தது. பொன்னி அதை மெதுவாக எடுத்துக் கதவைத் திறந்து கொண்டு உட்புறம் சென்று பூட்டியிருப்பது போலவே அந்தப் பூட்டை நாதாங்கியில் மறுபடி யும் பொருத்தி விட்டு வேதாவின் கையைப் பிடித் துக் கொண்டு வீட்டிற்குள் மிகவும் ஜாக்கிரதை யோடு நுழைந்தாள். அவர்களிருவரும் குருவிக்குளத்திற்குச் சென்று வருவதற் குள் அங்கு எவ்விதமான மாறுதலும் ஏற்பட்டிருந்ததாக அவளுக்குத் தெரிய வில்லை. மரகதமும் செங்கம்மாவும் அப் பொழுது ஆழ்ந்த நித்திரையி லிருப்பதா கத் தான் அவளுக்குத் தோன்றியது. இரு வரும் பூனை போல் மாடிப்படி ஏறிச் சென்றனர். வேதாவிற்குத் தன் அறைக் குச் சென்ற பின் மனதிலிருந்த பயமும் நடுக்கமும் ஓரளவு தணிந்தது. பொன்னி அவளிடம் மறு நாள் இரவு சந்திப்பதா கச் சொல்லி விடை பெற்றுக் கொண்டு தன்னுடைய சிறிய அறைக்கு வந்தாள். அப்பொழுது ஏற்பட்டிருந்த களைப்பினும் ஆயாசத்தினும் அவள் படுத்தவுடன் தன் நினைவிழந்து தூங்கி விட்டாள்.

மறுநாள் காலையில் செங்கம்மா அவ ளுடைய முதுகில் தட்டி எழுப்பியபின் தான் அவளுடைய நித்திரை கலைந்தது.

"என்ன தூக்கம்! ஏன் நீ இவ்வளவு நேரமாக எழுந்திருக்கவில்லை! வீட்டுக் காரியமெல்லாம் அப்படி அப்படியே கிடக்கிறதே! உனக்கு ஏதாவது உடம்பு கிடம்பு சரியா யில்லையா, என்ன!" என்றுகேட்டாள் செங்கம்மா.



"அடி அசடே! 'எனக்கு நெக்லெஸ் வாங்கிக் கொடுங்கோ' என்று கேட்கிறாயே! அதெல் லாம் கழுத்து இருக்கிற ஸ்திரீகள் அல்லவா போட்டுக் கொள்ளுவார்கள்!"

'உடம்பு சரியாகத்தான் இருக்கிறது. இந்த அறையிலே என்னால் துளிக்கூடத் தூங்க முடியாது. ஒரு பக்கம் காற்று வராத கஷ்டம், ஒரேபுழுக்கம்; மறுபக்கம் மூட்டைப் பூச்சிக் கடி. போதாதற்குக் கொசுவோடு வேறு போராட வேண்டியிருக்கிறது. இப்படி இருந்தால் யாருக்காவது தூக்கம் வருமா ! ராத்திரி யெல்லாம் கண் விழித்தநிலே விடியற்காலையில் என்னையறியாமல் தூக்கம் வந்துவிட்டது'' என்றாள் பொன்னி.

"என்ன செய்கிறது ! உனக்குத் தூங்குவதற்கு ஒரு நல்ல இடம் பார்த்துத் தரலாம் என்றாலும் இந்த வீட்டிலே தகுதியாக ஒன்றும் படவில்லையே !'' என்றாள் செங்கம்மா அவள் மீது அனுதாபப்பட்டு உருகுகிறவள் போல்.

செங்கம்மா தன்மீது எவ்விதமான சந்தேகமும் கொள்ள வில்லை என்பதைத் தெரிந்து கொண்டதும் பொன்னியின் மனத்தில் தைரியமும் நிம்மதியும் ஏற்பட்டன. அவள் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே, "ஊம். என்ன செய்கிறது ! ஒரு வீட்டுக்கு வேலைக்கு என்று வந்து விட்டால் கஷ்டத்தைப் பார்த்தால் முடியுமா ! உங்களுக்கு ரொம்ப நல்ல மனசு தான். நான் இருக்கவும் படுக்கவும் நல்ல இடமாக இந்த வீட்டிலே இருந்தால் நீங்கள் கொடுக்காமல் மறுக்கவா போகிறீர்கள்!'' என்றாள் நயமான வார்த்தையில்.

"நான் எஜமானி அம்மாவிடம் சொல்லி உனக்கு ஒரு நல்ல இடமாகப் பார்த்துத் தரச் சொல்கிறேன். ஊம், எழுந்திரு ! சமையலறைக் காரியமெல்லாம் அப்படியே கிடக்கிறது, பார் !'' என்றாள் செங்கம்மா.

"உங்கள் தயவிருந்தால் இந்த வீட்டில் எது தான் நடக்காது ! இதோ வந்து விட்டேன்!'' என்று சொல்லியவாறே எழுந்து தன் உடைகளைச் சரி செய்து கொண்டாள் பொன்னி.

அன்று மத்தியானம் பொன்னி சமையலறையில் ஏதோ காரியமாக இருக்கும் பொழுது செங்கம்மா அவளிடம் வந்து, "நீ கந்தி தூர்க்கத்திற்குப் போய்ச் சில வீட்டுச் சாமான்கள் வாங்கி வர வேணும். இதோ சாமான் ஜாபிதாவும் பணமும் இருக்கிறது. சாயங்காலம் விளக்கு வைப்பதற்குள்ளே வாங்கிக் கொண்டு வந்து விடு, என்ன!'' என்றாள்.

ஜாபிதாவையும் பணத்தையும் எடுத்துக் கொண்டு புறப்பட்ட பொன்னி ஒரு மணி நேரத்திற்குள் கந்தி தூர்க்கத்திற்கு வந்து எல்லா சாமான்களையும் வாங்கிக் கொண்டு டாக்டர் பரசுராமன் வீட்டை நோக்கி நடந்தாள். டாக்டர் ஒரு நோயாளியைப் பார்க்கப் பக்கத்து கிராமத்திற்குச் சென்றிருக்கிறார் என்றும் இரவுதான் திரும்புவார் என்றும் அங்குள்ளவர்கள் சொல்லவே ஏமாற்றத்துடன் திரும்பினாள்.

மாலை வேளை. இரவு நெருங்குவதற்கு முன்னால் ராஜாளி மடத்திற்குப் போய்விட வேண்டுமென்ற எண்ணத்தில் அவள் அதிவேகமாக நடந்து வந்து கொண்டிருந்தாள். அவள் அவ்வூர் சுங்கச்சாவடியை நெருங்கிய பொழுது யாரோ ஒரு மனிதர் அங்கிருந்து மூன்று கிளையாகப் பிரிந்து செல்லும்



பாதைகளைப் பார்த்துத் தயங்கியபடி நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தாள். அவள் அவரை நெருங்கிய பொழுது அவர், "ஏன், அம்மா! சொக்கி குளத்திற்கு எப்படிப் போகணும்!" என்று கேட்டார்.

சொக்கி குளத்திற்குப் பாதை கேட்டவுடனே பொன்னி ஆச்சர்யத்தோடு அவர் முகத்தைப் பார்த்தாள். 'சொக்கி குளத்தில் ராஜாளி மடத்தைத் தவிர அதிகமான பெரிய வீடுகள் இல்லையே! இப்படிப்பட்ட ஒரு பெரிய மனிதர் சொக்கி குளத்தில் யாரைச் சந்திக்கப் போகிறார்! ஒரு வேளை ராஜாளி மடத்திற்கு...! அங்குதான் ஆண் வாசனையேவீசக்கூடாதே!' என்று எண்ணிய பொன்னி, "இதுதான் பாதை! நீங்கள் அங்கே யாரைப் பார்க்கப் போகிறீர்கள்!" என்று கேட்டாள்.

"பாதை தெரியாமல்தான் இவ்வளவு நேரம் திண்டாடிக் கொண்டிருந்தேன். நீயும் சொக்கி குளத்திற்குத்தான் போகிறாய் போலிருக்கிறது" என்றார் அந்த மனிதர் நடந்து கொண்டே.

"ஆமாம்! என்னோடு வாருங்கள்.

"ஏன் அம்மா! ராஜாளி மடம் என்று சொல்கிறார்களே, அது அங்கேதானே இருக்கிறது!" என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் பொன்னியின் `வியப்பு இன்னும் அதிகமாகியது. அந்த மனிதரின் முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு, "ராஜாளி மடமா? அது அங்கேதான் இருக்கிறது. நான் அந்த வீட்டில்தான் வேலை செய்து கொண்டிருக்கிறேன். இப்பொழுதும் அங்கேதான் போய்க் கொண்டிருக்கிறேன். நீங்கள் அந்த வீட்டிற்கா வருகிறீர்கள்! நீங்களெல்லாம் அங்கே வரக் கூடாதே!" என்றாள் பொன்னி.

அந்த மனிதர் திகைப்படைந்து, "நாங்களெல்லாரும் அங்கே வரக்கூடாதா! ஏன் அம்மா!" என்று கேட்டார்.

"ஏனா......! அந்த வீட்டிற்குள் யாரும் வரக் கூடாது. அதுவும் ஆண் பிள்ளைகளின் வாசனையே அங்கு வீசக் கூடாது."

"அப்படியா! ஆனால் மரகதம் நான் அங்கு வருவதைத் தடுக்க மாட்டாள்!" என்றார் அம் மனிதர்.



"உங்களிடம் நாலணா இருக்குமா? வீட்டுக்குப் போக பஸ் சார்ஜ் வேண்டும்!"

"ஐந்து ரூபாய் நோட்டாக இருக்கிறது!"

"பரவாயில்லை! கொடுங்கள். நான் டாக்ஸியில் போய் விடுகிறேன்!"

"அப்படியா! நீங்கள் யார்!" என்றாள் ஆர்வத்துடன் பொன்னி.

"நானா! என் பெயர் சிவப்பிரகாசம். அந்த வீட்டில் வேதா என்று ஒரு பெண் இருக்கிறாளே, உனக்குத் தெரியுமா...!"

"தெரியுமே! எனக்குத் தெரியாமல் எப்படி இருக்க முடியும்!"

"நான் அவளுடைய தந்தை..." என்றார் அந்த மனிதர் பதட்டமில்லாமல்.

பொன்னிக்கு இந்தச் செய்தி வெடி குண்டு வைத்துத் தாக்கியது போன்ற அதிர்ச்சியை ஏற்படுத்தியது. அவள் அவரை விழித்த விழி கொட்டாமல் ஆச்சர்யத்தோடும் அவநம்பிக்கையோடும் பார்த்துக் கொண்டு நின்றாள்.

"நீங்கள் என்ன சொன்னீர்கள்...!" என்று கேட்டாள் பொன்னி, அந்த மனிதரின் வார்த்தையில் சிறிதும் நம்பிக்கை இல்லாதவள் போல்.

அந்த மனிதர் கேலியாகச் சிரித்துக் கொண்டே, "உனக்கு ஏன் அம்மா இவ்வளவு ஆச்சர்யம்! என் பெயர் சிவப்பிரகாசம். நான் வேதாவின் தந்தை. இப்பொழுது புரிந்ததா!" என்றார்.

பொன்னி நம்பிக்கைப் படாதவள்போல் தலையை ஆட்டி, "நான் நம்பமாட்டேன். நீங்கள் அவளுடைய தகப்பனாரல்ல. அவர்தான் அப்பொழுதே இறந்துவிட்டாரே!" என்றாள் படபடப்போடு.

பொன்னியின் வார்த்தையைக் கேட்டதும் அந்த மனிதருக்கு வியப்பும் கோபமும் வந்தது. "அவளுடைய தகப்பனார் இறந்துவிட்டதாக யார் சொன்னது!" என்றார் ஆத்திரத்துடன்.

"யார் சொன்னதா! செங்கம்மா......"

"செங்கம்மாவா......? யார் அந்த மூதேவி!" என்றார் முன்னிலும் அதிகக் கோபத்துடன்.

"அவளும் ராஜாளி மடத்தில்தான் வேலை செய்கிறாள்" என்றாள் பொன்னி.

"ஓஹோ! அப்படியா! அவள் பெரிய மோசக்காரியாக இருப்பாள் போலிருக்கிறதே! இதோ நான் உயிரோடுதான் இருக்கிறேன். நான்தான் வேதாவின் தந்தை. நீ அங்கே வா. எல்லாம் தானே விளங்கும்" என்றார் கோபத்தோடு.

"நீங்கள் என்னோடு வரத் தடையில்லை. உங்களை அழைத்துக் கொண்டு போகிறேன். நீங்கள் 'நான் தான் வேதாவின் தகப்பன்'என்று மரகதத்திடமோ செங்கம்மாவிடமோ சொல்லி ஏமாற்றி விடுவது சாத்தியமல்ல. அவர்களிருவரும் சாதாரணப் பெண்களல்ல. கடைசியில் எல்லாம் கேலிக் கூத்தாகத்தான் முடியும்!" என்றாள் பொன்னி.

"கேலிக் கூத்தாக முடியுமா!" என்று சொல்லி அந்த மனிதர் ஏளனமாகச் சிரித்து விட்டு, "ஏன் அப்படிச் சொல்கிறாய்!" என்றார்.

"அவர்களை நீங்கள் நேரில் வந்து பார்த்த பிறகல்லவா அது தெரியும்! செங்கம்மாவும் மரகதமும் பைத்தியக்காரிகளல்ல. அவர்களுக்கு ஆண் பிள்ளைகளென்றால் அடியோடு பிடிக்காது. அதுவும் தவிர நீங்கள் உண்மையிலேயே வேதாவின் தகப்பனாராக இல்லாவிட்டால் அது பெரிய விபரீதமாகப் போய் முடியும்" என்றாள் பொன்னி.

"சரிதான். அதையும்தான் பார்ப்போமே! வா, போவோம்" என்றார் அந்த மனிதர்.

அவர்கள் இருவரும் சிறிது தூரம் மௌனமாக நடந்தனர். பொன்னி மெதுவாகப் பேச்சுக் கொடுத்துச் சிவப்பிரகாசத்தின் வாயைக் கிளறினாள். "நீங்கள் உண்மையாகவே வேதாவின் தகப்பனாராக இருந்தால் நீங்கள் இறந்து விட்டதாகச் செங்கம்மா ஏன் சொல்லணும்!" என்றாள்.

"அதுதான் எனக்கும் விளங்கவில்லை. அந்த வார்த்தையை அவள் வாயால் நானே நேரில்

கேட்க வேண்டும். அதிருக்கட்டும். வேதா கூடத் தன் தந்தை இறந்து விட்டதாகத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறாளோ!'' என்று கேட்டார்.

''ஆம். தன் நினைவறிந்து தாயையும் தகப்பனையும் கண்ணால் பார்க்காதவள் பிறர் வார்த்தையை நம்பித்தானே ஆக வேண்டும்! இது அவள் மீது குற்றமல்ல. நீங்கள் உண்மையில் அவளுக்குத் தந்தையாயிருந்தால் இவ்வளவு நாளும் அவளை ஏன் வந்து பார்க்கவில்லை!''

''அவளை நான் இவ்வளவு நாளாக வந்து பார்க்காததற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன'' என்றார் அந்த மனிதர்.

''என்ன காரணமோ!'' என்று மேலும் கிளறிக் கேட்டாள் பொன்னி.

''அந்தக் காரணங்களையெல்லாம் இப்பொழுது உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்க முடியாது.''

''எது வேண்டுமானாலும் இருக்கட்டும். இவ்வளவு நாட்களாக வேதாவைப் பார்க்காமல் இருந்து விட்டு இன்று திடீரென்று வந்து 'நான் தான் உன் தந்தை' என்றால் அவளுக்கு நம்பிக்கை ஏற்படவேண்டாமா!'' என்றாள் பொன்னி.

இவ்வளவு நாளும் தன் பெண்ணைப் பார்க்காத ஒரு மனிதர் திடீரென்று ஒரு நாள் அவளைப் பார்க்க ராஜாளி மடத்திற்கு வந்தால் அதில் ஏதோ காரணம் இருக்கத்தானே வேண்டும்! உண்மையாகவே அவர் வேதாவின் தந்தையாக இருந்தால் அவர் இறந்து விட்டார் என்று செங்கம்மா சொல்வதற்கும் ஏதோ ஒரு பூடகமான காரணம் இல்லாமலா இருக்கும்! இருவரில் யாரோ மோசக்காரர்கள். ஒன்று வேதாவின் தந்தை என்று சொல்லிக் கொள்ளும் சிவப்பிரகாசம் மோசக்காரராக இருக்க வேண்டும். அல்லது வேதாவின் தந்தை இறந்துவிட்டதாகச் சொல்லும் செங்கம்மா மோசக்காரியாக இருக்க வேண்டும். எல்லாம்" தானே சிறிது நேரத்தில் விளங்காமலா போய்விடப் போகிறது! இந்த மனிதரை மரகதமும், செங்கம்மாவும் எப்படி வரவேற்கிறார்கள் என்பதிலிருந்தே தெரிந்து விடாதா! ஆகவே பொன்னி அதுவரையில் வாயைத் திறக்காமலிருப்பதுதான் நல்லதென்று எண்ணினாள். ஆனால் உண்மையில் அவர் வேதாவின் தகப்பனாராக இருந்து விட்டால் அவள் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் ஒன்று இருந்தது.

ஆகவே, அவள், ''நீங்கள் வேதாவை உங்களோடு அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறீர்களா...!'' என்று கேட்டாள். இதுதான் திடீரென்று அவளுக்கு ஏற்பட்ட சம்சயம்.

''அதைப் பற்றியெல்லாம் இப்பொழுது நான் ஒன்றும் சொல்ல மாட்டேன்'' என்று சொன்னார் சிவப்பிரகாசம்.

பொன்னி ஒன்றும் பதில் பேசவில்லை. இருவரும் மௌனமாகக் குறுகிய பாதை வழியே நடந்து வந்து கொண்டிருந்தனர். இந்த மனிதர் வேதாவைத் தன்னோடு அழைத்துச் செல்ல முடிவு செய்தால் அதை உடனே எப்படியாவது டாக்டர் பரசுராமனுக்குத் தெரியப்படுத்திவிட வேண்டும் என்று எண்ணினாள் பொன்னி. அதை எப்படி டாக்டருக்கு அவசரமாக தெரியப்படுத்துவது என்று சிந்தித்தவாறே பொன்னி நடந்தாள்.

எங்கும் இருள் சூழும் நேரத்தில், இரவு நெருங்கும் வேளையில் அவர்கள் இருவரும் ராஜாளி மடத்தை அடைந்தனர். (தொடரும்)

## உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நல்ல வழி



அமெரிக்கன் மாடல் பிஸ்டல், லைசென்ஸ் அவசியமில்லை. டிராமா, சர்க்கஸ், பணத்தைக் காப்பாற்றிக் கொள்ள, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இதற்கு மிஞ்சிய சிநேகிதனில்லை. சுட்டபொழுது நிஜமான பிஸ்டல் மாதிரி பயங்கரமான சப்தம் உண்டாகி நெருப்பு ரவைகள் வெளிவரும். விலை 8-8-0 போஸ்டேஜ் 1-8-0 தனி. தோல் பெட்டி 2-8-0. பிஸ்டலுடன் 25 குண்டுகள் இலவசம். தனியாக தோட்டாக்கள் வேண்டுமானால் 1 டஜன் 1-8-0.

## வீட்டில் சினிமா ( புரொஜக்டர் )



வீட்டிலேயே சினிமா பார்த்து ஆனந்த மடையலாம். இந்த சலனப் படங்களை திரையின்மேல் பார்க்கலாம். இது பிரகாசமாகவும், கவர்ச்சிகரமாகவும் பிரதிபலிக்கிறது. விலை ரூ. 7-8-0 வி. பி. பி. சார்ஜ் ரூ. 2-0-0. மேற்கொண்டு பிலிம் கெஜம் 1-க்கு அணா 8 தனி.

## கொசு வலை

கொசுக்கடியின் உபத்திரவத்திலிருந்து எங்களது உயர்ந்த ரக வலையினால் காப்பாற்றிக் கொள்ளுங்கள். வெளியிடங்களில் ரூ. 15க்கு கூட கிடைப்பது கஷ்டம். விலை ரூ. 7-8-0. வி. பி. பி. சார்ஜ ரூ. 1-8-0 தனி.

## 14 பாஷைகள் 48 மணி நேரத்தில்

ஆங்கிலம், ஹிந்தி, மராத்தி, குஜராத்தி, பர்மீஸ், தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. வி. பி. பி. சார்ஜ் அணா 12.

## எலக்ட்ரிக், ரேடியோ கைட்

மின்சார சக்தியின்றி இயக்கக் கூடிய ரேடியோவை ரூ. 15 செலவிலேயே தயாரியுங்கள். ரேடியோ ரிப்பேர், எலக்ட்ரிக் ஒயரிங் முதலியவைகளைக் கற்றுக்கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை ரூ. 4-4-0. வி. பி. பி. சார்ஜ் அணா 12 தனி.

## தொழில் புஸ்தகங்கள்

சோப் தயாரிக்கும் முறை ரூ. 3. வாசனை திரவியங்களுக்கானது ரூ. 3. தையல், கட்டிங் முறை ரூ. 3-8-0. போட்டோகிராபிக் ஆசான் ரூ. 3. டிராயிங், பெயிண்டிங் ரூ. 4. ரப்பர் தொழில் ரூ. 3. வி. பி. பி. சார்ஜ் தனி.

**கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்**

**SANSAR TRADING Co., (P. 11) Kanwariganj, Aligarh U. P.**



# நரை மயிருக்கு விடைகொடுத்து விடுங்கள்

Pearline Paris Ltd.

# ஹென்னுல்

**நிரந்தரமாக நரையை நீக்குகிறது**

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரஸ்வாமி**

## 6. சிரசாசனத்தின் மகிமை

சிரசாசனத்தின் மகிமை சொல்லத்தரமல்ல. அதைச் செய்து பார்த்தவர்களுக்குத் தான் அதன் மகிமை தெரியும். அதை எழுத்தால் வர்ணிக்கப் புகுந்தால் ஓர் அளவுதான் எழுத முடியும். வாயால் சொன்னால் ஒரு சில மணி நேரம் தானே நம்மால் பேச முடியும்! எழுத்துக்கும் சொல்லுக்கும் அடங்காத பல அற்புதங்கள் சிரசாசனத்தைப் பழகுவதால் நடக்கின்றன.

ஒரு கஷ்டமான, சாதாரணமாக முடியாத ஒரு காரியத்தை ஒருவன் செய்து கொண்டு வர வேண்டுமானால் "அந்தக் காரியத்தை எப்படியும் தலைகீழாக நின்றாவது சாதித்து வந்து விடுகிறேன்" என்று சொல்வது வழக்கம். ஒரு காரியத்துக்காக ஒருவன் வந்து அடிக்கடி தொந்தரவு செய்தால் "நீ என்னதான் தலைகீழாக நின்றாலும் ஒன்றும் நடவாது; போ" என்று தன்னுடைய கொடாத் தன்மையை—விருப்பமின்மையைக் காட்ட உபயோகிக்கிறார்கள். படிக்கும் மாணவன் தன் பாடங்களைத் 'தலைகீழ்'ப் பாடமாக உருப் போடுதல் சாதாரணம். இம்மாதிரி "தலைகீழ்" என்னும் பதத்தை ஒரு முயற்சியின் சிகரமாகக் காண்பிப்பதை அறிகிறோம். ஆனால் உண்மையில் தலைகீழாக நின்று சிரசாசனத்தைச் செய்து காரியாம்சத்தில் காட்டி சாதிப்பதில்லை. அப்படிக் காரியாம்சத்திலும் யாரிடமாவது சென்று ஒரு காரியத்தைச் சாதிக்கச் சிரசாசனம் செய்து காட்டினால். ஏதோ பைத்தியம் பிடித்து விட்டது என்று நிச்சயமாய் முடிவு கூறி விடுவார்கள்.

ஆகவே, தலைகீழாக நிற்பது என்பது, பிறரிடம் சென்று சாதிக்கும் காரியங்களுக்காகவோ, வேறு எதற்காகவோ ஏற்பட்டிருக்காது. எல்லாவித முயற்சி செய்தும், எதனாலும் நோய் தீரவில்லை; எந்த மருந்தினாலும் குணமில்லை; எந்த ஊசியினாலும் குணமில்லை; எந்த வைத்தியத்தினாலும் குணமில்லை. கடைசியில் யாராலும், எதனாலும் தனக்கு உபகாரமில்லை என்ற நிலைக்கு வந்த பின் தலைகீழாக நின்று சிரசாசனத்தைச் செய்து தன் நோய், பிணியை அந்தக் காலத்தில் தீர்த்துக் கொண்டிருப்பார்கள். "தலைகீழாக நின்று சாதித்து விட்டாயோ" என்ற சொல் அப்போது ஏற்பட்டிருக்கும். அதை எப்படியோ நடைமுறையில் பேச்சுப் பழக்கத்தில் முடியாத காரியத்தைச் செய்து முடிக்க வேண்டுமானால் இந்தத் தலைகீழ் என்னும் வார்த்தை உபயோகத்துக்கு வந்து விட்டிருக்கலாம். அது எப்படி வழக்குச் சொல்லாக வந்திருந்தாலும் உண்மையில் தீராத பல வியாதிகளையும், யாராலும் சொஸ்தப் படுத்த முடியாத பல நோய்களையும் சிரசாசனம் தீர்க்கிறது என்பது என்னவோ உண்மை.

"ஐயா! தலைகீழாக நிற்பது இயற்கைக்கு விரோதமல்லவா! அப்படித் தலைகீழாக நிற்பது நல்லதென்பது உண்மையானால் கடவுள் நம்மைத் தலைகீழாகவே இருக்கும்படி படைத்திருக்கமாட்டாரா! 'சிருஷ்டிக்கு விரோதமாய் நட' என்று சொல்வது இயற்கைக்கு விரோதம்" என்று நியாயத்தை விளம்புவோர் பல பேர் உண்டு.

நாம் இயற்கையாய் வாழ்கிறோமா! அல்லது இயற்கையுடனாவது ஒத்துழைக்கிறோமா! மனிதன், தன் புத்தி, யுக்தி, முயற்சி முதலியவைகளால் நாளுக்கு நாள் இயற்கையை விட்டுத் தூர விலகிக்கொண்டே போகிறான். அப்படி இயற்கையைப் பற்றிப் பேசப்போனால், புகை பிடிக்கிறீர்களே! அது இயற்கையா! அப்படி அது இயற்கையென்றால் தலையில் ஒரு புகைப் போக்கிக் குழாயுடன் அல்லவா இயற்கை படைத்திருக்க வேண்டும்! காப்பியைக் குடிப்பது இயற்கை என்றால் பசு. பால் சுரப்பதற்குப் பதிலாகக் காப்பியாகவே அல்லவா சுரக்க வேண்டும்! நெல்லில் அரிசி இருப்பதற்குப் பதில் சாதமாகவே அல்லவா விளைய வேண்டும்! சோடா ஊறு! கிரஷ் ஊற்று! சோப்புக் குன்று! இப்படி இயற்கை சிருஷ்டித்திருக்க வேண்டுமல்லவா!

இயற்கை என்பதுதான் என்ன! கிடைப்பதை அப்படியே அனுபவிப்பது புசிப்பது, வாழ்வது. ஆனால் மனிதன் அப்படிச் செய்கிறானா! மனிதனைத் தவிர மற்ற உயிர்கள் இயற்கைப்படியே வாழ்கின்றன. ஆனால் மனிதனின் செயல் ஆற்றும் திறனானது, பல விதங்களில் இயற்கையுடன் போராடிப் போராடி ஆதிகால முதல் பல துறைகளில் முன்னேறிக் கொண்டு வந்திருக்கிறது. அதற்கு ஒரு முடிவோ. எல்லையோ கிடையாது. ஆனால் மனித சமூகம் மீண்டும் பின்னேறி ஆதி மனிதனைப்போல வாழவோ, இருக்கவோ முடியாது. அப்படி இருக்கவேண்டிய அவசியமுமில்லை. தற்காலத்தை ஒட்டி மனித வாழ்க்கைக்கு எது உகந்தது; எது தேவை; எவை நல்லது; எது



டாக்டர் :—குழந்தைக்கு நாலு நாளைக்கு மருந்து கொடுத்தாள், ஒரு நாளைக்குள்ளேயே அதைத் தீர்த்து விட்டீர்களே!

அவர் :—ஒவ்வொரு தடவை குழந்தைக்கு மருந்து கொடுக்கும் போதும் நான் அந்த மருந்தைச் சாப்பிட்டுக் காட்ட வேண்டியிருக்கிறதே!



"என் மாப்பிள்ளையிடம் ஒரு விசேஷம். சீட்டு ஆடவும் தெரியாது; குதிரைப் பந்தயமும் தெரியாது!"

"அப்படியா? நீர் அதிர்ஷ்டக்காரர்தான்! ரொம்ப நல்ல மாப்பிள்ளையாகக் கிடைத்திருக்கிறார்!"

"அதிர்ஷ்டமா? நாசமாய்ப் போச்சு! தினம் கிளப்பிலே சீட்டாடிப் பத்து, இருபது தோற்றுப் போகிறான். ஒரு பந்தயம் தவறாமல் குதிரை வாலில் பணத்தைக் கட்டித் தோற்றுப் போகிறான்!"

அவசியம் என்று பகுத்தறிந்து நடந்தால் போதும். பல ஆயிரம் தலை முறைகளாக மாறிக்கொண்டு வந்த மனித சமூகம் செயற்கை முறைகளைக் கைக்கொள்ளும்போது பல சௌகரியங்களை அடைந்திருந்தாலும் கூடவே பல அசௌகரியங்களையும் அடைய வேண்டியதாயு மிருக்கிறது. இப்படி ஏற்படுவது சகஜமே. அந்த அசௌகரியங்களிலிருந்து விடுபடப் பல சோதனைகள். பல சாதனங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இன்னமும் கண்டுபிடித்து வருகின்றனர்.

ஆனால் நமது பாரத நாட்டில் நமது யோகிகள் கண்டு பிடித்ததுபோல அவ்வளவு நுட்பமாய், விஞ்ஞான ரீதியாய் எந்த நாட்டினரும் எந்த இனத்தினரும் இதுவரை கண்டு பிடிக்கவில்லை. கூடுவிட்டுக் கூடு பாய்தல், ஒரு அறையில் அடைத்து வைத்தால் உடலை அணுக்களாய்ப் பிரித்து, மறுபடி வெளியில் வந்து கூடி உலாவல், நினைத்த மாத்திரத்தில் அமெரிக்காவில் இருத்தல், தன் மூளையிலிருந்து ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட்பித்தல், பாம்புடன் வசித்தல், காட்டு மிருகங்களுடன் உறவாடல், நீரின் மேல் மிதத்தல், நெருப்பில் குளித்தல், சூட்சும சரீரத்துடன் மறு உலகங்களுக்குச் சென்று வரல், செத்தவர்களை உயிர்ப்பித்தல், தொட்ட மாத்திரத்தில் நோய் நீக்கல் முதலிய அதிசய சாதனைகள் எல்லாம் நமக்குத் தெரியாததால், "அதெல்லாம் வெறும் பொய், கட்டுக் கதை. கற்பனை" என்று சொல்லலாம். ஆனால் ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன்புகூட இவைகள் நடந்திருக்கின்றன. இவைகளிற் சில, சமீபத்திலும் நடந்திருப்பது, தற்போதிருக்கும் சில வயதானவர்களுக்கும் தெரிந்திருக்கும். இவைகள் எல்லாம் இயற்கை சிருஷ்டியின் ரகஸ்யத்தை அறிந்த நம் பாரத நாட்டு முனிவர்களுக்கு, யோகிகளுக்கு ஒரு சிறு பிள்ளை விளையாட்டுப் போன்றது.

அதிலும் மனிதனின் முக்கிய உறுப்பாகிய உடலைப்பற்றி யோகிகள் நன்கு தெரிந்திருக்கின்றனர். அதற்கு வேண்டிய உபாயங்களையும் கண்டு பிடித்திருக்கின்றனர். அதுதான் சிரசாசனம். சிரசாசனம் அதிகம் செய்யச் செய்ய யோக மார்க்கத்தில் இன்னும் பல அதிசயங்களெல்லாம் நிகழ்த்த முடியும். அதற்கெல்லாம் நாம் இல்லறத்தில் இருந்து கொண்டு, உலக விவகாரங்களில் மனத்தை ஈடுபடுத்திக் கொண்டு செய்ய முடியாது. அதற்கான நேரம், உணவுப் பத்தியம், வைராக்கியம் முதலியவைகளை நம்மால் அனுசரிக்க முடியாது. ஆனால் நாம் இல்லறத்தில் இருந்து கொண்டு, உலக விவகாரங்களில் ஈடுபட்டுக் கொண்டு சிறிதளவு சிரசாசனம் செய்து கொள்ளலாம். யோகிகள், சந்நியாசிகள், பிரம்மச்சாரிகள் தான் செய்ய வேண்டுமென்பதில்லை. சிரசாசனத்தில் பல படிகள் உண்டு. அவைகள் எல்லாம் அவர்கள் செய்யட்டும். ஆனால் முதல்படியாகிய வெறும் சாதாரண சிரசாசனம் மட்டும் நாம் செய்தால் போதும்.

அவ்வாறு நாம் தவறாமல் சிரசாசனம் செய்து வந்தால் மூளை ஆரோக்யமாக இருக்கும். நாம் வாழும் வரையில் நோய் நொடிகளின்றி ஆரோக்கியமாக இளமையுடன் வாழலாம்.

இந்தச் சிரசாசனத்தில் குறைந்தது நாலு நிமிஷம் முதல் அரை மணி நேரம் வரை நிற்கப் பழகிக் கொண்டால் போதும். நாம் வாழ்க்கையில் வெற்றி யடைந்தவர்களாகி விடுவோம். இவ்வாறு பல நாட்கள், பழகி வரவர யோக சித்தி அனுபவங்கள் சிறிது சிறிதாக ஏற்படும். இதற்கு அவரவர் பூர்வ பக்குவத்துக்குத் தக்கபடி. நியம, நியமங்களுக்கு ஏற்றபடி சீக்கிரம் ஏற்படுமோ, தாமதித்து ஏற்படுமோ ஆகும். புருவ மத்தியில் ஜோதியைக் காண்பது, தச நாதங்களான அற்புத நாத நாவங்களைக் கேட்பது போன்ற ஆரம்ப சித்திகள் ஏற்படும். சாதாரணமாய்க் குடும்பத்தில் இருந்து கொண்டே உலக விவகாரங்களில் ஈடுபட்டுக் கொண்டே தினமும் அரை மணி நேரம் சிரசாசனத்தைப் பழகுகிறவர்களுக்கே இம்மாதிரி அனுபவங்கள் ஏற்படுகின்றதென்றால், இதையே நோக்கமாகக் கொண்டு யோக மார்க்கத்தைக் கடைப்பிடித்து, மணிக் கணக்காக யோகத்தைப் பயில்பவர்களுக்கு எதுதான் ஏற்படாது!

ஆகவே, யோக மார்க்கமானது மனிதன் உன்னத நிலை அடைய ஒரு சாதனமாக அமைந்திருக்கிறது. இதைக் கடைப்பிடித்தவர்கள் நோய் எனும் பிடிப்பிலிருந்து விடுபடுவது தென்னவோ நிச்சயம். ஆகையால் அன்பர்களே! இன்றே கங்கணம் கட்டிக் கொள்ளுங்கள். "நான் நோய்களுக்கு இரையாகித் துன்பம் அனுபவிக்கப் பிறக்கவில்லை. ஆரோக்கியமாயிருந்து ஆனந்தத்தை அனுபவிக்கவே பிறந்தேன். அதற்கு உடல் நலம் அவசியம். இவ்வுடலுடன்தான் எதையும் சாதிக்க முடியும். ஆகையால் எதை விட்டாலும் இனி யோகாசனத்தை விடமாட்டேன்" என்று தினமும் பன்முறை மனத்துக்குப் புத்தி சொல்லித் திடப்படுத்திக் கொள்ளுங்கள். பிறகு அவகாசம், நேரம், உற்சாகம் எல்லாம் கிடைக்கும். சோம்பல், தூக்கம் முதலியன வந்தால் மனத்தால் விரட்டி அடியுங்கள். அதுதான் மனிதனின் விரோதி. யோக சாதனமே உங்கள் தோழன். சிரசாசனமே சிறந்த நண்பன். (தொடரும்)

# சமையற்கார சங்கரன்

கே. ஆர். கௌஸல்யா

எங்கும் நிசப்தம் குடிகொண்டிருந்தது தோளில் கட்டுகளுடன் ஆஸ்பத்திரி கட்டிலின் மேல் படுத்துக் கொண்டிருந்தான் சமையற்காரச் சங்கரன். தரையில் விரிக்கப் பட்டிருந்த ஒரு பாயில் தன் குழந்தைகளுடன் உட்கார்ந்து கொண்டிருந்தாள் அவன் மனைவி காமேச்வரி. அவர்களை ஒரு முறை வெறித்து நோக்கினான் அவன்.

'உம்' என்ற நீண்ட பெருமூச்சு எழுந்தது சங்கரனின் இருதயத்திலிருந்து. அவனுடைய கண்கள் கண்ணீரில் மிதந்தன.

*　　　*　　　*

அன்று ஜகதீசய்யரின் வீடு தடபுடல் பட்டுக்கொண்டிருந்தது. பெரிய செல்வந்தரான அவர், தம் ஒரே புதல்வன் சுகுமாருக்கு அக்ஷராப்பியாசம் செய்யும் அந்த நாளை விசேஷமாக நடத்தத் தீர்மானித்திருந்தார். அவருடைய சிநேகிதர்கள் எல்லாரும் அவர் அழைப்பு அனுப்பியதன் பேரில் வந்து கூடியிருந்தனர். அக்ஷராப்பியாசம் நடப்பதற்கான விசேஷச் சடங்குகள் ஒரு வழியாக முடிந்து விட்டன. எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தனர். சமையற்காரச் சங்கரனுக்கு மூச்சுவிடக்கூட நேரமில்லை. சங்கரன் அந்த வீட்டில் ரொம்ப நாட்களாகவே சமையல் வேலை செய்து கொண்டிருப்பவன். மிகவும் திறமைசாலி என்று பெயர் வாங்கி இருந்தவன். அன்று விசேஷ தினமாகையால் ஓடி ஓடிக் காரியங்கள் செய்து கொண்டிருந்தான்.

சாதம், குழம்பு, காய்கறி வகைகள் முதலியவற்றைப் பரிமாறிவிட்டு, வறுவல் வைத்திருந்த அந்தப் பெரிய கூடையை எடுத்தான் அவன். 'சுருக்'கென்று உள்ளங் கையில் ஏதோ குத்தியது. நிதானித்து என்னவென்று பார்த்துக் கொண்டிருக்க அதுவா நேரம்? கூடையை எடுத்துக் கொண்டு ஓடினான்.

ஒரு வழியாக எல்லோரும் சாப்பிட்டுவிட்டு எழுந்தனர். பாத்திரங்களைச் சுத்தப்படுத்தி எடுத்து வைத்து ;விட்டு ஜகதீசய்யரிடம் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குச் சென்று விட்டான் சங்கரன்.

ஒரு வாரம் சென்றது. அன்று காலை வழக்கம்போலவே அவர்கள் வீட்டிற்குச் சமையல் செய்வதற்காகச் செல்ல எழுந்தான் சங்கரன். வலது உள்ளங் கையில் லேசாக வலிக்க ஆரம்பித்தது. ஒன்றும் இருக்காதென்று அசுவாரஸ்யமாக இருந்து கொண்டு வலியையும் பொருட்படுத்தாமல் வேலை செய்து கொண்டிருந்தான். மெள்ள மெள்ள வலி கை முழுவதும் விஷம் போல் வேகமாக ஏற ஆரம்பித்தது. வலது கையை அசைக்கக்கூட முடியவில்லை அவனால். ஜகதீசய்யரிடம் லீவு வாங்கிக்கொண்டு வீட்டிற்கு வந்து படுத்து விட்டான். அவனுடைய மனைவியும், குழந்தைகளும் பதறிப் போய் விட்டனர்.

இனி சும்மாயிருப்பதில் பயனில்லை என்று ஒரு நல்ல டாக்டரைக் கூட்டிக் கொண்டு வந்து காண்பித்தாள் காமேச்வரி.

டாக்டர், சங்கரனுடைய கையைப் பரிசோதித்துப் பார்த்தார். கையில் ரொம்ப ஆழமாக ஒரு பெரிய சிலும்பு ஏறி யிருக்கிறது. அதை எடுப்பது ரொம்ப கஷ்டம். ஐந்நூறு ரூபாய் பணம் கொடுத்தால் குணப்படுத்தி விடுகிறேன். நாளைக் கடத்தினால் கை முழுவதையுமே எடுத்து விடும்படி நேரும் என்றார்.

இதைக் கேட்டதும் காமேச்வரிக்கும் சங்கரனுக்கும் உலகமே தலைகீழாய்ச் சுற்றுகிறதோ என்று பிரமை தட்டியது. 'யாரிடம் பணம் கேட்பது? கேட்டால்தான் சமையற்காரனை அவனை நம்பி அவ்வளவு பணம் கொடுப்பார்களா? அப்படியானால், வயிற்றுப் பிழைப்புக்கே ஆதாரமான வலது கையே போய் விட்டால், அப்புறம் வாழ்க்கை நடத்த வழி?'

சட்டென்று ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டான் சங்கரன். ஆம்; யாருடைய வீட்டில் வேலை செய்ததால் இக் கதி நேரிட்டிருக்கிறதோ அந்த ஜகதீசய்யரிடமே கடனாகப் பணம் கேட்பது. பிறகு தான் நல்லபடியாக எழுந்ததும் அந்தப் பணத்துக்கு அவர் வீட்டிலேயே உழைத்துச் சரிகட்டி விடுவது என்று தீர்மானித்தான். உடனே தன் மனைவியை அவரிடம் பணம் கேட்க அனுப்பி வைத்தான்.

சோர்ந்த முகத்துடனும், உடைந்த உள்ளத்துடனும் வெறுங்கையாகத் திரும்பி வந்தாள் காமேச்வரி. தற்போது குடும்பத்தில் ஏக செலவாகையால் இப்போது பணமில்லை என்று நிர்த்தாட்சண்யமாக அவர் கூறிவிட்டதாகவும், தான் எவ்வளவோ மன்றாடியும் பயனில்லை என்றும் கூறினாள்.

இத்தகைய ஒரு ஏமாற்றம் தனக்கேற்படுமென்று கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை சங்கரன். பல்வேறு எண்ணங்களால் குழம்பித் தவித்த அவனுடைய கண் முன் கையை இழந்து பிழைப்புக்கு வழி இல்லாமல் அவன் உட்கார்ந்திருக்க அவனைச் சூழ்ந்து அனாதைகளைப்போல் நிற்கப் போகும் அவனுடைய குழந்தைகளின் பரிதாபகரமான தோற்றங்கள் தோன்றி மறைந்தன.

கன்னத்தில் ஊன்றிய கையுடன் திக்பிரமையுடன் உட்கார்ந்திருந்தாள் காமேச்வரி. தயை தாட்சண்யமின்றி 'இல்லை' என்று தன் ஆபத்துக் காலத்தில் கூடக் கையை விரித்த அந்தப் பணக்காரக் குடும்பத்தினரைச் சபித்தது அவள் உள்ளம்.

நாட்கள் ஓடி மறைந்தன. பணமில்லாத காரணத்தால் எவ்வளவு நாட்கள் சும்மாயிருப்பது? கையிலிருந்த பொருள்களை விற்று டாக்டரிடம் கொடுத்து வைத்தியம் செய்து கொள்ள ஆரம்பித்தான் சங்கரன். ரொம்ப நாட்கள் தாமதப் படுத்தி விட்டதால் கையில் உள்ளே சீழ் பிடித்து விட்டது. ஆகையால் கையை எடுப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும் இல்லாவிட்டால் உயிருக்கே ஆபத்து என்று சொல்லித் தோள் வரை கையை வெட்டி எடுத்து விட்டார் டாக்டர்.

சங்கரன் வலது கையை இழந்து உயிர் பிழைத்தான். அவனைப் பார்த்துக் காமேச்வரியும் குழந்தைகளும் கதறினர்.

வீட்டுக்கு வந்தது முதல் இரவு வேளைகளைத் தூக்கமின்றியே கழித்து வந்தான் சங்கரன். அவன் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள தன் எஜமானர் ஜகதீசய்யரின் பங்களாவைப் பார்த்துப் பெருமூச்செறிவான். அவர் மட்டும் மனது வைத்து உதவி செய்திருந்தால் தனக்கு இந்தக் கதி நேரிட்டிருக்குமா? என்று எண்ணி எண்ணி மனம் சாம்பிப் போவான் அவன்.

* * *

இரவு சுமார் மணி பத்து இருக்கும். திடீரென்று கிளம்பியது அந்தக் கூக்குரல். ஜகதீசய்யரின் பங்களாவிலிருந்து "நெருப்பு! நெருப்பு! ஆபத்து! ஐயோ!" என்ற சத்தங்கள் மேகக் கூட்டங்களிடையே சென்று கலந்து கொண்டிருந்தன. ஜகதீசய்யரின் கையைப் பிடித்து வெளியே இழுத்து வந்தார் அவருடன் கூட்டு வியாபாரம் செய்யும் சிவராஜன். திடீரென்று எப்படி இது ஏற்பட்டிருக்கும் என்று புரியாமல் விழித்துக் கொண்டு நின்றனர் எல்லோரும். நீயணைக்கும் ஸ்டேஷனுக்கு டெலிபோன் பறந்தது. அடுத்த நிமிஷம் பெரிய இரைச்சலுடன் தீயணைக்கும் யந்திரமொன்று வந்து நெருப்பை அணைக்க ஆரம்பித்தது.

"இதோ! இதோ! கண்டு பிடித்து விட்டேன் குற்றவாளியை!" என்ற சிவராஜனின் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார் ஜகதீசய்யர். எல்லோருடைய பார்வையும் அந்தப் பக்கம் சென்றது. சமையற்கார சங்கரன்தான் அங்கே மூர்ச்சித்து விழுந்து கிடந்தவன். விஷயம் புரிந்து விட்டது ஜகதீசய்யருக்கு. ஒரு சமயம் தான் அவனுக்குப் பண உதவி செய்ய மறுத்ததற்குப் பழிவாங்கி விட்டான் என்று நினைத்தார்.

தற்செயலாகத் தான் அன்று வியாபாரக் கணக்குகள் சிலவற்றைப் பற்றி அவரிடம் கேட்க வந்ததாகவும், அப்போது சங்கரன் நெருப்பு வைத்ததைக் கண்ணால் பார்த்ததாயும் கூறினார் சிவராஜன்.

உடனே போலீசுக்கு விஷயம் அறிவிக்கப் பட்டது. அதற்குள் சமையற்கார சங்கரனும் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்.

"போயும் போயும் இத்தகைய ஒரு காரியத்தை நீ செய்வாய் என்று கொஞ்சங்கூட நாங்கள் எதிர்பார்க்கவில்லை. என் வீட்டுச் சமையற்காரனாக இருந்து விட்டு என் வீட்டுக்கே நெருப்பு வைத்து விட்டாயே! சிவராஜன் பார்த்திராவிட்டால் நீ தப்பிச் சென்றிருப்பாய். நல்ல வேளையாகக் கடவுள் அவனை இங்கே கொண்டு வந்து விட்டார். துரோகி! பாவி!" என்று சங்கரனைத் திட்டி விட்டு வெறுப்புடன் பார்த்தார் ஜகதீசய்யர். அதற்குள் போலீஸ் லாரி வந்து நின்றது.

போலீஸ் லாரியில் அவன் ஏற்றப் பட்டான்.

சங்கரனைப் போலீஸில் ஒப்படைத்து விட்டு உள்ளே வந்தனர் எல்லோரும். நல்ல வேளையாக வீட்டின் பின்புறம் மட்டும்தான் கொஞ்சம் சேதமாகி யிருந்தது.

அப்போது ஏதோ நினைத்துக் கொண்டவள் போல ஜகதீசய்யர் மனைவி, "ஐயோ! நம் சுகுமார் எங்கே?" என்று அலறினாள்.

அவசரத்திலும் பயத்திலும் அவனை மாடியிலேயே விட்டு வந்து விட்டதை நினைத்துப் பதறி ஓடினாள். மாடியில் சுகுமார் இல்லை. வெறி பிடித்தவள் போல் கீழே ஓடி வந்தாள்.

சட்டென்று அவள் பார்வை வாயிற்புறத்திற்குச் சென்றது. தூரத்தில் கிடந்த அந்த உருவத்தைப் பார்த்தாள். சுகுமார்தான். முன்பு சங்கரன் விழுந்து கிடந்த இடத்துக்குச் சுமார் பத்து கஜ தூரத்தில் ரணகாயங்களுடன் சுருண்டு கிடந்தான்.

உடனே சிறுவன் சுகுமாரன் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப் பட்டான்.

* * *

இரண்டு நாட்களாகி விட்டன. அன்று தான் கொஞ்சம் நினைவு தெளிந்திருந்தது சுகுமாரனுக்கு. மெள்ளக் கண் விழித்துப் பார்த்தான். அவன் பார்வை ஒரு முறை சுற்றிச் சுழன்றது. அவன் படுத்திருந்த



ஜவுளிக் கடை வியாபாரி (தம் மனைவியிடம்):—உங்கப்பா ஏதோ சாம்பிள் துணி வேண்டும் என்று கடிதம் எழுதி யிருந்தாரே, அனுப்பி வைத்தாயா?

மனைவி: அனுப்பினேன்.

புருஷன்:—ஏதாவது ஆர்டர் கொடுத்தாரா?

மனைவி:—இல்லையே! பவுண்டன் பேனாவின் மசியைத் துடைப்பதற்காக வேண்டியிருந்ததாம்; அதற்காகத்தான் எழுதியிருந்தாராம்!

கட்டிலருகில் நின்று கொண்டிருந்தனர் ஜகந்நாதய்யரும், அவருடைய மனைவியும்.

"அம்மா !..."

"என்னடா கண்ணு?" என்று கேட்டாள் ஜகந்நாதய்யரின் மனைவி.

"அந்த மாமா எங்கே அம்மா?"

சுகுமார் நினைவு தப்பிப் பேசுகிறான் என்று நினைத்தார் ஜகந்நாதய்யர்.

"எந்த மாமாடா கண்ணு?"

"நம்ப சமையற்கார சங்கர மாமா, அப்பா! வீடு நெருப்புப் பற்றி எரியும்போது மாடியிலிருந்து என்னை அவர்தான் தூக்கிக்கொண்டு கீழே ஓடி வந்தார். ஓடிவரச்சே 'சடார்'னு மாடிப்படி தடுக்கி விட்டது. உடனே அவர் தடுமாறி மாடிப்படியிலிருந்து விழுந்தார். அவர் ஒரு பக்கமும், நான் ஒரு பக்கமும் போய் விழுந்தோம். அவர் இல்லாவிட்டால் நான் நெருப்பில் மாட்டிக் கொண்டிருப்பேன்" என்று தட்டுத்தடுமாறிக் கொண்டே சொன்னான் சுகுமாரன்.

தூக்கி வாரிப் போட்டது ஜகந்நாதய்யருக்கும் அவர் மனைவிக்கும்.

"என்னது? சங்கரன் சுகுமாரைத் தூக்கிக்கொண்டு வந்து காப்பாற்றினான்? அப்படியானால்?......"

குழந்தையைப் பார்த்துக் கொள்ளும்படி தன் மனைவியிடம் சொல்லி விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினார் ஜகந்நாதய்யர்.

ரண காயங்களுக்குச் சிகிச்சை பெற, சங்கரன் ஆஸ்பத்திரியில் இருப்பதாகத் தெரிந்தது. உடனே ஆஸ்பத்திரியை நோக்கிச் சென்றார். வாசலில் அடியெடுத்து வைக்கும் போதே அவர் முன் தென்பட்டார், அவருடன் கூட்டு வியாபாரம் செய்து வரும் சிவராஜன். ஜகந்நாதய்யரைக் கண்டதும் சடாரென்று அவர் காலில் விழுந்தார்.

"தயவு செய்து என்னை நீங்கள் மன்னித்து விடவேணும். உங்கள் வீட்டுக்கு நெருப்பு வைத்தவன் சங்கரனில்லை. நான் தான். உங்கள் வீட்டைக் கொளுத்தி உங்களை யெல்லாம் தொலைத்து விட்டு நானே வியாபாரத்திலே வர லாபத்தை யெல்லாம் எடுத்துக் கொள்ள வேணும் என்ற துர் எண்ணத்திலே அப்படி செய்தேன். அதுக்குப் பலன் என் கைமேலே கிடைத்து விட்டது. என் குழந்தை மாடியிலிருந்து கீழே விழுந்து விட்டான். பிழைப்பது கூடக் கஷ்டம் என்று சொல்லுகிறார் டாக்டர். 'நாம் என்ன பாவம் செய்தோம், இடிபோன்று நம் ஒரே குழந்தைக்கும் இக்கதி ஏற்பட!' என்று கேட்டாள் என் மனைவி. அன்று நான் செய்த அந்தத் துரோகச் செயலை மெள்ள வெளியிட்டேன். உடனே அவள் தான் என்னைத் தங்களிடம் மன்னிப்புக் கேட்க விரட்டினாள். இப்படி உங்கள் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கா விட்டால், நாம் செய்த இந்தப் பாவம் நம்மைத் தலைமுறை தலைமுறையாகப் பாதிக்கும் என்று புத்திப் புகட்டினாள். என்னை மன்னிப்பீர்களா?" என்று கூறிக் கதறினார் சிவராஜன்.



ஒருவர் :—என்ன ஸார் இது, காலிலே இவ்வளவு பெரிய கட்டு?

மற்றவர் :—ஒரு மோட்டார் விபத்திலே அகப்பட்டுக் கொண்டேன் நேற்றைக்கு......!

ஒருவர் :—அட பாவமே! எப்போது ஸார், அது? எந்த இடத்திலே?

மற்றவர் :—நேற்றுக் காலையில், ஸார்! நம்ம பையனுடைய மோட்டாரிலே தடுக்கிக் கீழே விழுந்து விட்டேன்! காலிலே காயம் பட்டு விட்டது.

---

ஜகந்நாதய்யர் ஒரு கணம் மௌனமாக இருந்தார். அடுத்த கணம் சங்கரன் படுத்திருந்த வார்டை நோக்கி ஓடினார். அவரைப் பின் தொடர்ந்து வந்தார் சிவராஜன்.

சமையற்காரச் சங்கரன் கட்டிலில் படுத்துக் கிடந்தான். காயம்பட்ட இடங்களில் பலமாகக் கட்டுப் போடப் பட்டிருந்தது. கட்டிலுக்கு அருகில் அவன் மனைவியும் குழந்தைகளும் பரிதாபமாக உட்கார்ந்திருந்தனர்.

ஜகந்நாதய்யர் சங்கரன் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். "சங்கரா! என்னை மன்னிக்க வேண்டும்" என்று கதறினார். இதைக் கண்ட சங்கரனுக்கும் அவன் மனைவிக்கும் ஒன்றும் புரியவில்லை.

"சங்கரா, உன்னையும் உன் குடும்பத்தையும் நான் வாழ்நாளெல்லாம் காப்பாற்றுகிறேன்! நான் செய்த பாவத்துக்கு அது தான் பிராயச்சித்தம். நீ என்னை மன்னித்து விட்டேன் என்று சொல்லு" என்று அவன் ஒற்றைக் கையைப் பிடித்துக் கெஞ்சினார்.

சங்கரன் "நான் என்ன மன்னிப்பதற்கு? என் கடமையை நான் செய்தேன். சுகுமாரன் சௌக்கியமாக இருக்கிறானா?" என்றான்.

"சுகுமாரன் சௌக்கியமாக இருக்கிறான். உன்னால்தான் என் அருமைப் பிள்ளை பிழைத்தான். நீ உன் உயிரையும் திரணமாக மதித்துக் குழந்தையைக் காப்பாற்றியிருக்கிறாய்" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் ஜகந்நாதய்யரின் மனைவி.

சங்கரன் முகத்தில் ஒரு மகிழ்ச்சி தெரிந்தது.

"சங்கரா! இனி உனக்கு ஒரு கவலையும் வேண்டாம். உன்னையும் உன் குடும்பத்தையும் காப்பாற்ற வேண்டியது இனி என் பொறுப்பு" என்று கூறி அவன் குழந்தைகளையும் மனைவியையும் அழைத்துக் கொண்டு சென்றார் ஜகந்நாதய்யர்.

சமையற்காரச் சங்கரன் ஸ்பெஷல் வார்டில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறான்.




தற்கால நிலைமைகளினால் நமது பலம், சக்தியும் அதிகமாக விரயமாகிறது. இதை ஈடு செய்வது ஆழ்ந்த சுக நித்திரைதான். இரவில் நல்ல தூக்கமில்லையேல் மறுநாள் வேலைக்குச் சக்தியே இருக்காது. தினசரி படுக்கைக்குப் போகுமுன் ஓவல்டின் சாப்பிடுங்கள். அது நல்ல அயர்ந்த நித்திரை தர உதவுகிறது. மேலும் உங்கள் தூக்கத்திலேயே அடுத்த நாளுக்கு வேண்டிய உடல், நரம்புகளுக்குப் பலம் தரக் கூடிய போஷணை அளிக்கிறது. ஓவல்டினில் சுத்தமான பசுவின் ஏட்டுப் பால், பழுத்த பார்லி மால்ட், கோக்கோ, சக்திதரும் இயற்கையான உணவுகளும், பாஸ்படைட்கள் பி, டி, விடமின்களும் இருக்கின்றன. ஓவல்டினில் இருக்கும் போஷாக்கு மற்றும் விடமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினை விடச் சிறந்தது வேறு கிடையாது.

டாக்டர்கள் எங்கும் அதைச் சிபார்சு செய்கிறார்கள். போலிகளைத் தள்ளி விடுங்கள்.

விநியோகஸ்தர்கள் : கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.

# ஓவல்டின்

ஆழ்ந்த சுகமான நித்திரைக்கு

OV.328

# நடுங்கும் நாடு!

ஹிரோஷிமா குடாக்கடலும் அதை அடுத்துள்ள மலையும்

அறிஞர் தனிநாயகம்

நாள் முழுவதும் பறந்து பறந்து சென்ற கடல் வானூர்தி யொக்கொஹாமாவின் அகன்ற நீர்ப் பரப்பில் கடற்பறவை போல் களைப்புற்று வந்து அமர்ந்தது. விண்ணில் அது தனக்கு வகுத்த பெருவழி பார்மோசாத் தீவிற்கும் இன்னும் நூற்றுக் கணக்கான தீவுகளுக்கும் நேர் மேலே சென்றது. மலையுச்சிகளில் மிகவும் சிறந்ததெனப் போற்றப் பெறும் பியூஜியாமாவின் கொடுமுடியை, பறக்கும் பொழுதே பார்க்க வேண்டுமென்று உற்று நோக்கிக் கொண்டிருந்தேன். செருக்கோடு திரையிட்டிருந்த முகில்கள் ஒரு சிறு பொழுது மட்டும் திரையை நீக்கிப் பனிமூடிய அவ் எரிமலை விளிம்பைக் காட்டின. அவ்வற்புதக் காட்சியை நினைத்துக் கொண்டே மோட்டர் வள்ளத்தில் இறங்கிக் கரையை அடைந்தேன். கரையில் என் நண்பர் எனக்காகக் காத்திருந்தார். இருவரும் தோக்கியோவை நோக்கிச் சென்றோம்.

ஜப்பானை யான் பார்க்க வேண்டுமெனப் பல்காலம் விருப்புடையேனாய் இருந்தேன். மேல் நாடுகள் எல்லாம் ஏறக்குறைய ஒரே வகையான பண்பாட்டினையே காட்டுவன. எனவே, ஆங்குப் பல் ஆண்டுகள் தங்கிய யான், அவற்றினின்று வேறுபட்ட நாடுகளைக் காண விழைந்தேன். மேலும், ஜப்பானின் வரலாறு இளமைப் பருவத்திலேயே என் கருத்தைக் கவர்ந்தது. ஐம்பது ஆண்டுகளில் இத்துணை முன்னேற்றமும், எழுத்தறிவும், கல்வியும் அடைந்த மக்களை அவர் தம் சூழ்நிலைக் கண்ணே காண அவாவுற்றேன்.

ஒரு மணி நேரம் ஜீப் வண்டியில் சென்றோம். தெருக்கள் கரடு முரடாய் இருந்தன. போர் முடிந்து ஐந்து ஆண்டுகள் கழிந்தும், பெருந் தெருக்களில் குண்டு வீழ்ந்த குழிகள் பெரும் புண்கள் போல் வாய் திறந்து நின்றன. அன்று சனிக்கிழமை மாலை. அது ஓய்வுடைப் பிற்பகலாகலின், தெருக்களில் மக்கள் போக்கு வரவு அத்துணை மிகுதியாய் இருக்கவில்லை.

ஆயினும், ஆங்கு யான் கண்ட மக்கள் அனைவரும் எளிய ஆடைகள் அணிந்தோராய், தலை குனிந்து, தம் உண்மை உணர்ச்சிகளை மறைப்பவர் போல் நடந்து சென்றனர். அந்நாடு போரால் இத்துணைச் சீரழிவு அடைந்திருக்கும் என்று யான் அதுகாறும் உணர்ந்திலேன். மரத்தாலும் காகிதத்தாலும் இயற்றப்பெற்ற அவர்தம் இல்லங்கள், இரவுதோறும் அமெரிக்கர் இறைத்த தீக்குண்டுகளுக்கு இரையாயின. யொக்கொஹாமாவிலிருந்து தோக்கியோ மட்டும் பெரிய வெட்டவெளிபோல் பரந்து தோன்றியது. பேரொலியுடன் மின் வண்டிகள் சென்றன. புகை வண்டிகளிலும் மின் வண்டிகளிலும் மக்கள் நெருக்கமாய் நிறைந்திருந்தனர். அவர்கள் வாடிய முகங்களையும், இடிந்தழிந்த பெரு நகரின் தோற்றத்தையும் காண்டலும், இரக்கமுற்றேன். என் நண்பரும் தம் நாட்டின் செல்வச் சிறப்பற்ற நிலைமையை மன்னிக்க வேண்டுவார்போல் நடந்து கொண்டார். யான் செல்வக்காலை வாராது அல்லற்காலை வந்துள்ளேனே என மனம் குழைந்தேன்.

ஆயினும், அம்மாலைப் பொழுதில் என் நண்பர் தமது மனையகத்தே எனக்குப் பெரு விருந்தளித்தார். அந்த முதல் நாளே ஜப்பானிய இல்லத்தின் அழகையும், அவர்களின் சீரிய பழக்க வழக்கங்களையும் அறிந்து கொண்டேன். உறைவிடம் குறுகியதும், சப்பாத்தைக் கழற்றி ஒருபுறம் வைத்துவிட்டு உள்ளே மெல்லிய தொடுதோலுடன் நடந்து செல்லுகின்றனர். உட்புறம் தடித்த பாய்கள் விரிக்கப் பெற்றுள்ளன. எங்குப் பார்க்கினும் ஓவியக் கலைஞனின் வனப்பு வண்ணங்களே தோன்றுகின்றன. இல்லத்தின் தூய்

மைக்கு எல்லே இல்லை. அவர்கள் விருந்தினரை வரவேற்குங்கால், இடை தொசியப் பன்முறை தாழ்ந்து குனிந்து வணங்குகின்றனர். யானும் அவர்களைப்போல் வணங்க முயன்றேன். இரண்டு மூன்று நாளைக்குப் பன்பு, எனக்கு அறிமுகப் படுத்தியவரை எல்லாம் அங்ஙனம் பல்கால் பணிந்து குனிந்து வாழ்த்தியதால், எனக்கு இடுப்பு வலி தொடங்கிவிட்டது! அதன் பின் ஆங் கண்டோர்கள் என்னை மெய் குனிந்து வணங்கும் பொழுதெல்லாம், யான் பதிலுக்கு அவரைக் கைகூப்பி வணங்கலாயினன்.

* * *

ஜப்பான் வடிவில் சிறுமையை விரும்புவர். அன்னார் பெரும்பாலும் வளர்ந்தவர் அல்லர். அவண் வதிந்தகாலே, யான் மிக்க வளர்ச்சி உடையேன்போல், எனக்கு உணர்வு தோன்றியது. அவர்க்கென அமைத்து வைத்த ஏற்ற இறக்க முடியாத "மைக்" உயர இடங்களில் எல்லாம் யான் குனிந்து நின்றே பேச வேண்டியதாயிற்று. சிறு இல்லங்களில், சிறு மலர்ச் செப்புக்களில், சின் மலர்களை வைத்து, அணி செய்வர். தரையில் சிறு பஞ்சணைகள் மேல் அமர்ந்து, சிறு மேசைகள் மீது, சின்னஞ் சிறு கலங்களில் உணவைப் படைத்து வைப்பர். அவை பாவை மணத்தில் சிறுவர் வைக்கும் சிறு கலங்கள் போல் இருக்கும்.

சோறு வழங்கும்பொழுதும், அதனைச் சிறு சிறு உருண்டைகளாக அமைத்து, கடல் தாழையின் புல்லைப் போன்ற மெல்லிய மடல்களால் சுற்றி வைப்பர். அச் சோற்று உருண்டைகளை இரு சிறு மூங்கிற் குச்சிகளால் எடுத்து, கடல் தாழைக்கேற்ற சாற்றில் தோய்த்து உண்பர். கடல் தாழை உணவிற்குச் சீரிய பொருள் என்பது அவர் கருத்து. மூங்கிற் குச்சிகள் இரண்டினையும் இரு கைகளாலும் பிடிப்பார் அல்லர். இரு குச்சிகளையும் வலது கை முன்விரல்களிலேயே பற்றிக்கொண்டு, உணவை எடுத்து எடுத்து உண்பர்.



அறிஞர் தனிநாயகம்

எனினும், அவர் கஞ்சியை அக்குச்சிகளைக் கொண்டே அடித்தடித்து வாயிற் கொழுப்பிப் பருகிய அருஞ் செயல், எனக்குப் பெரும் வியப்பாயிற்று. எனக்கென்று கரண்டிகளும் முள்ளுகளும் கொணர்ந்து வைத்தனர். ஆயின், யானும் அவர்போல் உண்ண வேண்டுமென்று கருதி, குச்சிகளைக் கையில் எடுத்தேன். அவர்களுக்கு யான் உண்ட காட்சி நகைப்பாய் இருந்ததுடன், நானும் சில வேளை பட்டினி கிடந்தேன் என்பதும் உண்மையே. சின்னாள் சென்ற பின்னர், யானே கரண்டி முட்களை வலியக்கேட்டு வாங்கி, அவற்றால் உண்ணத் தொடங்கினேன்.

அக்காட்டினர் நெல்லுச் சோற்றிலிருந்து குடிவகை ஒன்று உண்டுபண்ணி நன்றாகக் குடிக்கின்றனர். அதன்பெயர் "சாக்கி." அதனைச் சிறு குப்பிகளில் வார்த்துவைத்து, சிறு சப்பி அளவான கலத்தில் பெய்து, பருகுகின்றனர். சோயாப் பருப்பைக் கொண்டு அவர்கள் செய்யும் உணவுப் பொருட்களும், தின் பண்டங்களும், மிக்க சுவையுடையன. விருந்துண்போர், உணவு வகைகளின் நலத்தினை உற்று நுகர்ந்து, அந்நுகர்ச்சி இன்பத்தை இதழாலும் வாயினாலும் தோன்றும் ஒலிக் குறிப்புக்களால் புலப்படுத்துதல், ஜப்பானியரின் உயர்ந்த ஒழுக்கம். எனவே "ஹா," "ஹோ," "உஸ்" எனும் ஒலிகளை விருந்தினர் எழுப்புவது வழக்கம்!

* * *

தேநீர்ச் சடங்கு என்பது ஜப்பானியரால் சிறப்பாகப் பண்படுத்தப் பெற்ற பெரும் பழக்க முறை. தேநீரை வழங்குவதற்குத் தங்கள் பெண்டிர்க்குச் சிறப்புப் பயிற்சி அளிக்கின்றனர். தேநீர் விருந்து நடத்துவதற்கென்றே தனி அறைகள் அமைக்கப் பெற்றுள்ளன. ஆண்டு விருந்தினரை எங்ஙனம் வரவேற்றல் வேண்டும், எவ்வாறு அமரச் செய்தல் வேண்டும், பச்சைத் தேயிலையை என்ன வண்ணம் பசையாக்கி அளித்தல் வேண்டும், என இத்தகைய பற்பல கோட்பாடுகள் உள்ளன. தேநீர் விருந்து நடத்துவதற்கு மூன்று நான்கு மணி நேரம் செலவிடுவர். தேயிலையுடன் பாலோ சர்க்கரையோ கலந்து பருக மாட்டார். மூன்று மணி நேரம் உபசாரச் சடங்குகள் நடந்து நிறைவேறிய பின்னர், வெறும் பச்சைத் தேயிலைப் பசையைப் பருகுவதில் யாதேனும் சுவையை யான் கண்டிலேன்.



ஜப்பானியரின் ஆலயம்

ஜப்பானியர் ஓவியம் போன்ற அருங் கலைகளில் சிறந்த வன்மை பெற்றவர்

அவர்தம் இசையும் நாட்டியமும், நம் இசையும் நாட்டியமும்போல், வளம் உற்றன என்று சொல்வதற்கில்லை. அவர்களுக்கும் யாழ் வீணைபோன்ற நரம்புக் கருவிகள் உள. "கோட்டோ" "சாமிசென்" என்பன அவற்றின் பெயர். அவர்களுடைய நாடகங்களில் 'நோ" நாடகங்கள் குறிப்பிடத் தக்கவை. அவற்றில், முதல் நடிகர் மட்டும், வெவ்வேறு முக மூடிகள் அணிந்து, பல பாத்திரங்களாக வந்து நடிப்பார். அன்னியர் இந் "நோ" நாடகங்களின் சுவையை நுகர்வது எளிதன்று. யான் ஒரு நாடகத்தை மூன்று மணி நேரம் பார்த்தும், அதன் சிறப்பு எனக்குப் புரியவில்லை.



ஜப்பானியப் பெண்கள் நடனம் செய்யும் காட்சி

ஜப்பானில் யான் கழித்த முதல் இரவில், என்வழிச் செலவின் களைப்பாலும், நீடிய விருந்தின் காரணமாகவும் நன்றாக உறங்கினேன். கட்டிலில் தலை சாய்த்தது தான் எனக்கு நினைவு. மறுநாட் காலையில் விழிப்புற்ற பொழுது, திடீரெனக் கட்டிலும், சாளரமும், கதவும், கண்ணாடியும் கடுமையாய்க் கிடுகிடுத்து ஆடுவதை உணர்ந்தேன். பெரும் நிலநடுக்கம் என்பது புலனாயிற்று. எனினும், யான் உற்ற களைப்பு அத்துணைப் பெரிதாதலால், நில நடுக்கத்தில் இறப்பதெனின் கட்டிலில் இறப்பதே மேல் எனக்கருதி, மறுபக்கம் திரும்பிப் படுத்துத் தூங்கிவிட்டேன்!

அந்நாட்டில், இவ்வண்ணம், எதிர்பாராத நேரங்களில் நிலம் நடுங்கும். ஜப்பானில் ஓர் ஆண்டில் ஏறக்குறைய மூவாயிரம் நடுக்கத்திற்கு மேல் நிகழ்கின்றது எனக் கணக்கிட்டிருக்கின்றனர்!

அவர்கள் பழமொழி யொன்று யார் யார்க்கு முறை முறையே அஞ்ச வேண்டுமென்பதைக் குறிப்பிடுகின்றது. "நில நடுக்கம், இடி முழக்கம், தீ, தந்தை." அஞ்சவேண்டிய பொருட்களைச் சுட்டிக் காட்டும் இவ்வரிசையில், நிலநடுக்கம் முதல் இடம் பெற்றது அது விளைக்கும் தீமையால். அங்குள்ள வீடுகள் எளிதில் தீப்பற்றிவிடும். அவர் நகர்களில் தீத்துன்ப மணியோசை யான் கேளாத நாள் இல்லை.

ஜப்பானின் இயற்கை அழகு மிகவும் பெயர் போனது. பனி மூடிய மலையுச்சிகளும், கோவில்கள் அமைந்த குன்றங்களும், அலரி மலர்ந்து பரவியிருக்கும் வெளியிடங்களும், மரமும், செடியும், கொடியும், படர்ந்து மலர்ந்து விளங்கும் பூங்காவுகளும், காடெங்கும் இன்பம் பயப்பதைக் காணலாம்.

அங்கு யான் மிகுதியாய் விரும்பிய காட்சி யாதெனின், அவ்வூர் மனைகளுடன் அமைந்துள்ள அழகிய நிலப்பரப்புத் தோட்டங்களே. இல்லத்தின் அண்மையில் சிறு இடம் ஏதுவும் இருந்தால், அதில் ஒரு சிறு குளமும், பாலமும் செய்குன்றமும், விளக்குத் தூணும் அமைத்து, தம் தோட்டக் கலையின் பெரும் வன்மையையும் தம் எழிற் சுவையையும் காட்டுகின்றனர். பெருமரங்களையும் சிறு குள்ளமாக வளர்ப்பதில் (Midget trees) அவர்கள் சிறப்புப் பயிற்சி பெற்றுள்ளனர்.

சென்ற இடமெல்லாம் அவர்கள் பெரு முயற்சிக்குப் பல வகைச் சான்றுகளைக் கண்டேன். அவர்களின் மக்கள் தொகைக்குப் போதிய உழவு நிலம் இல்லை. ஓர் ஏக்கர் உழவு நிலத்திற்கு 2,713 மக்கள் கணக்காகின்றனர். உலகில் இந் நெருக்கம்தான் மிகவும் பெரியது. நிலப்பரப்புக் குறைந்துள்ளதேனும், முயற்சியிலும் உழைப்பிலும் சிறந்து விளங்குகின்றனர் ஜப்பானியர். காவிரிக் கரையின் கழனிகளைக் கண்ட கண்களால், ஐந்து ஆறு சதுர அடி கொண்ட நிலத்திலே ஜப்பானில் நெற்பயிர் செய்யப்படுவது கண்டு, பெரும் வியப் படைந்தேன். அது, அவர் தம் பெரு முயற்சிக்கும், அம்மக்களின் பெரும் நெருக்கத்திற்கும், சான்றாவதை உணர்ந்தேன்.

சில இடங்களில் காகிதத்திலும், துணியிலும் பெரிய கயல்மீன் வடிவம் போன்ற கொடிகள் கூரைகள் மீது பறக்கக் கண்டேன். வினவிய பொழுது, அது இளைஞர் விழாவின் அறிகுறி என்றனர். அந்நாட்டில், ஆண் குழந்தைகளுக்கும், பெண் குழந்தைகளுக்கும், தனித்தனி விழாக்கள் ஆண்டுதோறும் கொண்டாடி வருகின்றனர். கயற்கொடிகள், கயல்மீன் நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லுதல் போல், இளைஞர் வாழ்க்கையின்

அணுகுண்டினால் நாசமான ஹிரோஷிமா நகரின் ஒரு பகுதி



இன்னல்களை எதிர்த்துச் செல்லுதல் வேண்டும் என்னும் நீதியை அவர்களுக்கு உணர்த்துகின்றன. மலைகளையும் மலர்களையும் போற்றி, அவற்றிற்கும் விழாக்கள் எடுக்கின்றனர் ஜப்பானியர்.

ஹிரோஷிமாவும் நாகசாகியும் குறிப்பிடத்தக்க இடங்கள் என்பது இயல்பே. அணுக் குண்டினால் அழிக்கப் பெற்ற இம்மாபெரு நகர்களைக் கண்ட பொழுதுதான், அக் குண்டின் கொடுமையை ஒரு சிறிதளவேனும் உணர்ந்தேன். நூறாயிரக் கணக்கான குற்றமற்ற உயிர்கள் ஒரு நொடிப் பொழுதில் மாய்ந்து மறைவதென்றால், அக் குண்டு வீழ்ச்சியைக் குறித்து யார்தான் வருந்தார்! அது விழுந்து ஈராண்டுகளாக அங்குப் "பசும் புல் தலை காண் பரிது" ஆயது. அவ் அணுக்குண்டின் தீப்பயன் இன்னும் ஆங்குத் தீர்ந்தபாடில்லை.

அணுநோயால் (atomic disease) துன்பப்படும் இருவரை யான் ஆங்குக் கண்டு, அவருடன் உரையாட நேர்ந்தது. அவர்களுள் ஒருவர் தாமே மருத்துவர். அணுநோயினால் தாம் படுகின்ற பாடுகளை யெல்லாம் விரிவாகப் பல நூல்களுள் வரைந்துள்ளார்.

நாகசாகி ஹிரோஷிமா போன்ற இடங்களில், ஜப்பானியர் சமாதான விழாக்கள் கொண்டாடுகின்றனர். எதிர்காலத்தில், போரைக் கடிந்து, அரசியல் நடத்த வேண்டுமென்று பல முயற்சிகள் செய்து வருகின்றனர். அத்தகைய சமாதான விழா ஒன்று தோக்கியோவில் நிகழ்ந்தபொழுது, என்னையும் பேசக் கேட்டனர். ஆங்கிலத்தில் சிறிது நேரம் பேசிய பின், ஜப்பான் மொழியில் எழுதிய ஒரு செய்தியைப் படித்தேன். யான் ஜப்பான் மொழியை அறிந்தேன் அல்லேன். ஆயினும், நண்பர் ஒருவர் எப் கருத்தை ஜப்பான் மொழியிற் பெயர்த்ததைத் தமிழ் எழுத்துக்களில் எழுதி, அதையே படித்தேன் அவர்கள், யான் ஜப்பான் மொழியை நன்கு கற்றவன் என்று எண்ணி, ஒரு சிறுமி வழியாக எனக்குப் பூங்கொத்து ஒன்றை மேடைக்கு அனுப்பி விட்டார்கள்!

# எப்படித் தெரியும்?

கிருஷ்ணா

ராமு ஒரு குடும்பஸ்தன். குடும்பஸ்தன் என்பதற்கு முன்னால் 'பெரிய' என்ற அடைமொழியையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். ஐந்து குழந்தைகள்! கிழட்டுத் தாயார், தகப்பனார், மனைவி, அவன் உள்பட ஒன்பது ஜீவன்கள்! இந்த ஒன்பது ஜீவன்களும் ராமுவின் வருமானத்தைத்தான் நம்பி யிருந்தன.

சம்பளம், அலவன்ஸ், இலவன்ஸ் எல்லாமாகச் சேர்ந்து நூற்றிருபது ரூபாய்தான்.

என்ன செய்வான் பாவம்? மற்ற எல்லா செலவுகளையும் குறைத்துக் கொண்டால் கூட அவனால் குடும்பத்தைச் சமாளிக்க முடியவில்லை. சில்லறைக் கடன்களோ விஷம் போல் ஏறிக்கொண்டே போயிற்று.

இந்தச் சமயத்தில் ஆபத்சகாயம்போல ஒரு லேவாதேவிக் கடைச் செட்டியார், ராமுவுக்கு உதவ முன்வந்தார். வட்டி கொடுக்கும் ஏற்பாட்டின் பேரில் பிராமிசரி நோட்டு எழுதி வாங்கிக்கொண்டு, அவனுக்கு ரொக்கமாக ஐந்நூறு ரூபாய் கடன் கொடுத்து உதவினார்.

அதை வாங்கி அப்படியே சில்லறைக் கடன்களை யெல்லாம் அடைத்து விட்டு நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான் ராமு.

ஒவ்வொரு மாதமும் சம்பளம் வாங்கியவுடன், செட்டியாருக்கு வட்டிப் பணத்தை ஒழுங்காகக் கொடுத்து விடுவான் ராமு.

சம்சாரம் என்பது சாகரமல்லவா? சுழி, புயற் காற்று, கொந்தளிப்பு எல்லாம் மாறி மாறி ஏற்படத்தானே செய்யும்?

ராமுவின் சம்சார ஓடம், மீண்டும் சுழியில் சிக்கித் தத்தளிக்க ஆரம்பித்தது.

செட்டியாரிடம் ரொக்கக் கடன் வாங்கி வருஷம் இரண்டுக்கு மேலாகி விட்டது. அந்தக் கடன் அடைபடவில்லை.

செட்டியார் வட்டிக்காகவும், முதலுக்காகவும் கிட்டி போட்டு நெருக்கினார் ராமுவை.

ராமுவோ, செட்டியார் கண்ணில் படாமல் தலை மறைவாய்த் திரியலானான்.

தேள், பூரான், கட்டுவாக்காலி என்றிருந்த சில்லறைக் கடன்களெல்லாம், பெரிய மலைப்பாம்பாக விசுவரூபம் எடுத்துச் செட்டியார் உருவில் வந்து தன்னைப் பயமுறுத்துவதாகக் கருதிக் கொண்டிருந்தான் ராமு.

இந்தத் தர்ம சங்கடத்தி லிருந்து தப்ப, தம் அருமை நண்பன் ஆபத்சகாய மூர்த்தியின் சகாயத்தை நாடினான் ராமு.

"பூ! இவ்வளவுதானா? இந்த ஐந்நூறு ரூபாய் பிச்சைக் காசுக்கா, இவ்வளவு கவலைப் படுகிறாய்? எனக்குத் தெரிந்த ஒரு தங்கமான மனிதர் இருக்கிறார்; அவரிடம் உன்னைக் கூட்டிக் கொண்டு போகிறேன். மனுஷன் மனம் வைத்தால், ஐந்நூறில்லை, ஐயாயிரம் வேணுமானாலும் கொடுப்பார். வட்டி மட்டும் ஒழுங்காகக் கொடுத்து வந்தாயானால் போதும்!" என்று ராமுவுக்கு அபயப்பிரதானம் அளித்தான் ஆபத்சகாயமூர்த்தி.

எப்படியாவது செட்டியாரின் தொல்லை தீர்ந்தால் போதும் என்ற நம்பிக்கையில் ராமுவும் ஆபத்சகாய மூர்த்தியுடன் சென்றான்.

இருவருமாக கடை வீதிக்கு வந்தார்கள்!

"அதோ பார், ராமு! அந்தக் கடைதான் நான் சொன்ன தங்கமான மனிதரின் வட்டிக் கடை!" என்று தூரத்தில் தெரிந்த ஒரு கடையைச் சுட்டிக் காட்டினான் ஆபத்சகாயம்.

அவ்வளவு தான்!

மறு கணமே, குதிகால் இடுப்பில் படும்படி வந்த வழியே திரும்பி ஓடலானான் ராமு.

ஆபத்சகாய மூர்த்தி விழித்தான்!

அந்தக் கடை செட்டியார்தான் ராமுவுக்கு ஐந்நூறு ரூபாய் கடனாகக் கொடுத்தவர் என்றும் அவர்தான் ராமுவைக் கடனுக்காகத் தொந்தரவு செய்கிறார் என்றும் ஆபத்சகாய மூர்த்திக்கு எப்படித் தெரியும்?

